உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 6 } இரௌத்ரி ஹு பங்குனிமீ கஉ { பகுதி 9
1921ஹு மார்ச்சுமீ 14உ

## கடவுள் வணக்கம்.

ஆணிலே பெண்ணிலே யென்போல வொருபேதை
யகிலத்தின் மிசையுள் ளதோ
ஆடிய கறங்குபோ லேரடியுழல் சிந்தையை
யடக்கியொரு கணமேனும் யான்
காணிலேன் றிருவருளை யல்லாது மௌனியாய்க்
கண்மூடி யோடு மூச்சைக்
கட்டிக் கலாமதியை முட்டவே மூலவெங்
கனலினை யெழுப்ப நினைவும்
பூணிலே னிற்றைநாட் கற்றதுங் கேட்டதும்
போக்கிலே போக விட்டுப்
பொய்யுலக னயினே னயினுங் கடையான
புன்மையே னின்ன மின்னம்
வீணிலே யலையாமன் மலையிலக் காகநீர்
வெளிப்படத் தோற்றல் வேண்டும்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே.

---

வாழாது வாழவினை வந்தடைந்தோ ரெல்லாரு
மாழாழி யென்னவரு ளாழ ரழுக்காற்றோ
டேழா யெனவுலக மேசுமினி நானொருவன்
பாழாகா வாறுமுகம் பார்நீ பராபரமே.

உள்ளத்தி னுள்ளே யொளித்தென்னை யாட்டுகின்ற
கள்ளக் கருணையையான் காணுந் தரமாமோ
வெள்ளத்தை மாற்றி விடக்குண்பார் நஞ்சூட்டும்
பள்ளத்தின் மீன்போற் பதைத்தேன் பராபரமே.

# ஆனந்தபோதினி

இரௌத்ரி ௵ பங்குனி ௴ ௧௨

## தாய் நாட்டின் ஒற்றுமை.

ஒற்றுமை யென்றால் ஒருவருக்கொருவர் மனம் ஒருமித்து நடத்தலாகும். ஒருவன் செய்யமுடியாத காரியத்தைப் பலர் சேர்ந்து ஒற்றுமையோடு செய்வதால் எளிதில் முடிக்கலாம். ஒற்றுமையால் உலகில் மனிதர் பல அரிய காரியங்களைச் செய்திருக்கிறார்கள். ஒற்றுமையால் எல்லா நன்மைகளையும் அடையலாம்; ஒற்றுமையின்மையால் பலவித இக்கட்டுகள் நேரிடும்; எக்காரியமும் கைகூடாது. ஒரு குடும்பத்தைத் திருட்டாந்தமாக எடுத்துக்கொள்வோம். அக் குடும்பத்திலுள்ள சகலரும் மனம் ஒருமித்துத் தங்களில் மூத்தவனாக விருப்பவனுக்குக் கீழ்ப்படிந்து நடந்துவந்தால் அக் குடும்பம் க்ஷேமமாக விருப்பதோடு அன்னியரும் அதைக் கௌரவமாக நடத்துகிறார்கள். அக்குடும்பத்தைச் சேர்ந்தவர்களிடம் யாவர்க்கும் மதிப்புண்டு. அப்படிக்கின்றி அக்குடும்பத்தில் ஒற்றுமையில்லாவிடினோ, சீக்கிரத்தில் அக்குடும்பம் க்ஷீணதசை யடைந்து கௌரவத்தை யிழந்துவிடும். பிறகு அதைச் சேர்ந்த எவரையும் அன்னியர் மதிக்கமாட்டார்கள். ஒற்றுமையே வல்லமை யென்பதும், ஒற்றுமைக் குறைவே பலகீனம் என்பதும் யாவரும் அறிந்த விஷயமே.

ஒரு குடும்பத்தைப் போலவே ஒரு ஜாதியாரும், ஒரு நாட்டாருங்கூட, ஒற்றுமை யுடையவர்களாக விருந்தாலே, வல்லமை, கௌரவம், மதிப்பு, செல்வாக்கு, க்ஷேமம் முதலியவைகளை யுடையவர்களாக இருக்கலாகும். திருட்டாந்தமாக உலகிலுள்ள பல தேசங்களையும் கவனியுங்கள். ஒற்றுமையின் தன்மை யின்னதென வுணர்ந்து ஒழுகும் நாட்டார்களெல்லாம் முன்னேற்ற மடைந்து, செல்வவந்தர்களாகப் பிறரால் மதிக்கப்பட்டு விளங்கக் காணலாம். உலகிலுள்ள நாகரீக நாடுகள் எல்லாவற்றிலும் பூர்வீக முதல் எல்லா விஷயங்களிலும் சிறப்புற்றிருந்த நம் தாய்நாடாகிய இப்பாரதபூமியே, ஓர் நாட்டாரின் முன்னேற்றத்திற்கு இன்றி யமையாத சாதனமாகிய ஒற்றுமையில் மிகக் குறைவுப்பட் டிருக்கிறது என்பது யாவருமறிந்த விஷயமே.

இதற்குக்காரணம் ஒருவாறாகக் கூறப்படவில்லை. சிலர் "நமது நாட்டில் பலஜாதி, பலமதம், பலஆசாரம் ஆகிய இப்பேதங்களிருக்கிறவரையில் நமக்குள் ஒற்றுமையுண்டாகாது" என்று கூறுகிறார்கள். சிலர் தாய்நாட்டின் முன்னேற்றத்தைப்பற்றிய உணர்ச்சியேயின்றி, "எப்படியாயினும் சரி, நாம் பணம் சம்பாதித்து நமது குடும்பம் வரையில் க்ஷேமமாக இருந்தால் போதும், யார் எப்படிப் போனாலென்ன?" என்று மனுஷத்தன்மை யில்லாமல் நடந்து கொள்வோர், சந்தர்ப்பம் வந்தபோது "நம்மவர்கள் நெல்லிக்காய் மூட்டைகளாயிற்றே; இவர்களுக்கு ஒற்றுமையேது?" என்று கூறிக்கொண்டே செல்கிறார்கள். இவர்கள் பூரண சுயநலப் புலிகள். இத்தகையோர் ஒருவன் "என் தலைச்சுமையைக் கொஞ்ச மிறக்கையா?" என்று வேண்டினால் 'நமக்கேன் அந்தத்தொல்லை' என்று பேசாமற் போய் விடுவார்கள். இவர்கள் கொடிய தேசத் துரோகிகள்; இத்தகையோர் நம் நாடு செய்த பாபமே உருவாகக் கொண்டவர்கள்.

முதலாவது, ஜாதிமத பேதத்தால் ஒற்றுமைக் குறைவு நேரிட்டிருக்கிறதா என்பதைப்பற்றிக்கவனிப்போம்: இப்பேதங்கள் மற்ற நாடுகளிலு மில்லாமலில்லை. நமது நாட்டில் பேச்சில் பேதமிருப்பதோடு நடக்கையிலு மிருக்கிறது. மற்ற நாடுகளில் பேச்சில் மட்டும் பேதமில்லையென்று கூறப்படுகிறதேயன்றி, நடக்கையில் இருக்கவேயிருக்கிறது. நம் நாட்டில் ஒன்றுக்கு மேற்பட்ட மதங்களிருந்தால், மற்ற நாடுகளில் ஒரே மதத்தில் பல பிரிவுகளிருக்கின்றன. அவற்றால் சச்சரவுகளும் நேரிட்டிருக்கின்றன. அவ்வாறிருந்தாலும் அவர்கள் ஒற்றுமையோடு நடந்து கொள்ளவில்லையா? நமது நாட்டில் ஜாதிமத வேற்றுமை நேற்று இன்று உண்டானதல்லவே. இப்போது அவற்றை யொழித்தால்தான் ஒற்றுமையுண்டாகு மெனில் அவை யெப்பொழிவது? ஆகையால் நாம் ஒற்றுமை யடைய மாட்டோம்; நாம் நாளுக்கு நாள் கீழ் நோக்கிச் செல்லவேண்டுவதே; யாவராலும் அவமதிக்கப்படவேண்டியதே என்று நாமே தீர்மானம் செய்துகொள்ளவேண்டியது தானோ? அய்யோ கடவுளே! இத்தகைய பேதை மதி கூட நமக்குண்டாகுமோ?

'ஜாதிமத பேத மிருக்கிறவரையில் ஒற்றுமை வராது' என்று கருதுவது முழுதும் தவறு என்பதற்கு நமது நாட்டிலேகூட தக்க அத்தாக்ஷியிருக்கிறது. அவற்றில் ஒன்றிரண்டைக் கூறுகிறோம். நம் நாட்டிலுள்ள இந்திய சைனியத்தில் ஒரு பட்டாளத்தில் ஒரு கம்பெனி பஞ்சாப் ஜாட் ஜாதியாரும், ஒரு கம்பெனி அசல் க்ஷத்திரியரும், ஒரு கம்பெனி சென்னை மாகாண மகம்மதியரும், ஒரு கம்பெனி கொங்கண நாட்டுத் தெலுங்கருமாக இருக்கிறார்கள். இப்

படி வெவ்வேறு ஜாதி, வெவ்வேறு மதமாக .விருக்கும் இவர்கள் தங்கள் தொழில்களை யொற்றுமையோடு செய்யவில்லையா? யாவரும் ஒரு மனதாகச் சகோதரர்கள் போல் ஒன்று சேர்ந்து எதிரிக ளோடு போர்புரிந்து ஜெயமடைய வில்லையா? தங்கள் காரியசித்திக் காகப் பிராணனையும் விடத்துணியவில்லையா? ஜாதிமத வித்தியா சம் அவர்கள் ஒற்றுமைக்கு இடையூறாக விருக்கவில்லையே. இப் போது நடந்த ஐரோப்பிய மகா யுத்தத்தில் ஒரே கட்சியில் பல ஜாதியாரும், பல மதத்தினரும், பல நிறத்தினரும், பல ஆசார முடையவர்களும் ஒன்று சேர்ந்து யுத்தம் புரியவில்லையா? இவற் றால் ஒற்றுமை மன உறுதியிலிருக்கிறதே யன்றி வேறில்லை யென நன்கு விளங்கவில்லையோ! அன்னிய நாடுகளிலும் பல பேதங்களும் கட்சிகளும் இருந்தாலும், தாய் நாட்டின் க்ஷேமத்தைப்பற்றிய ஒரு சம்பவம் நேரிடும் போது ஒவ்வொருவரும் நம் தாய் நாடு என்ற பக்தி ஒன்றையே கருத்திற்கொண்டு, தங்களுக்குள் இருக் கும் இதர பேதங்கள், கட்சிகள், சச்சரவுகள் யாவற்றையும் ஒரு பக்கம் விலக்கிவிட்டு, தாய் நாட்டிற்காக உழைக்கிறார்கள். எந்த நாட்டிலும் அரசன் ஒருவனே; உயர்ந்த அந்தஸ்திலிருப்பவர் சிலரே; மற்ற பேரெல்லாம் அவர்களுக்கு அடங்கி நடப்பவர்களே. "இப்படி நடந்து கொண்டால்தான் நம் தாய்நாடு க்ஷேமமடையும்; எல்லாருமே தான் தான் அரசனாகவும், மந்திரியாகவும், சேனாதி பதியாகவும் இருக்க வேண்டுமென்று கருதினால், அது நடக்கிற காரி யமல்ல; நாம் எந்த அந்தஸ்தி லிருந்தாலென்ன? நம்மாலியன்ற வே லையை நாம் செய்து நம் தாய் நாட்டின் க்ஷேமத்திற்கு உழைக்க வேண்டும்" என்ற ஒரே நோக்கங்கொண்டு அவர்கள் நடந்துகொள் கிறார்கள்.

நமது நாட்டிலோ ஒரு சபைகூடத் தொடங்கின், நால்வர் ஒருவரை அக்கிராசனாதிபதியாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென் றால், வேறு சிலர் இன்னொருவரை நியமிக்க வேண்டுமென்கிறார்கள். உடனே கட்சி இரண்டாவதுதான் இவர்கள் ஒற்றுமையடைய ஆரம் பித்ததற்கு முதல் அறிகுறி. சமீபகாலத்தில் இச்சென்னையில், ஒரு தரத்தார் ஒன்றுகூடி ஒரு விஷயத்தைப்பற்றி ஆலோசிக்கச் சபை கூடினார்கள். அச்சமயம் மேற்சொன்னபடி இருகட்சிகளுண்டாகி ஒவ்வொரு கட்சியும் வெவ்வேறு ஆளை அக்கிராசனாதிபதியாக நிய மிக்க வேண்டு மென்றார்கள். அச்சமயம் அங்கிருந்த அவயவிகளில் அறிவாளியாகிய ஒருவர் எழுந்து,

"சகோதரர்களே! இப்போது நாம் எந்த விஷயத்தைப்பற்றி ஆலோசனை செய்ய வந்தோமோ அந்த விஷயம் நிறைவேற வேண்டு மென்பதே நமது நோக்கமன்றி, அக்கிராசனாதிபதி பதவியைப் பெறுவதல்ல; அப்பதவிக்கல்ல நாம் இங்கு வந்தது. விவகாரம் நடை பெற ஒருவர் அப்பதவியில் இருக்கவேவேண்டும். மற்றபேர் அவர

வர்களால் இயன்ற உதவியைச் செய்யவேண்டும். எல்லாரும் ஒரு காரியத்திற்கே வேலை செய்கிறோம். என் வரையில் எனக்கொரு பில்லைகொடுத்து சபைக்கு டபேதாராக இருக்கச்சொன்னால் சந்தோஷமாக வாயிற்படியில் நின்று, வருகிறவர்களை வரவேற்று உட்காரவைத்து, சங்கத்தின் வேலையாக அங்கங்கு கடிதம் கொண்டுபோக வேண்டிய வேலையைச் செய்கிறேன்'' என்றார். உடனே கட்சி யொழிந்து காரியம் நடந்தது.

ஒவ்வொருவரும் காரியம் நிறைவேறவேண்டும் என்ற ஒரு நோக்கத்தைக்கொண்டு சுயநலமாவது, கௌரவமாவது கருதாமல் அக்காரிய சம்பந்தமான தொழில்மட்டில் நமக்குள் இருக்கும் எவ்வித பேதத்தையும், சச்சரவையும் மறந்து, தாய் நாட்டின் முன்னேற்றத்திற்கு நாம் உழைக்கவேண்டும் என்று வைராக்கியம் கொண்டால் ஒற்றுமை யேன் உண்டாகாதோ தெரியவில்லை.

நம் எதிரிகளை நாம் சுலபமாகச் செயிக்கவேண்டுமாயின் அவர்களுக்குள் கட்சிபேதத்தையும், சச்சரவு பொறாமையையும் உண்டாக்க முயல்கிறோம். இது பஞ்ச தந்திரங்களில் ஒன்று. நாம் முன்னேற்றமடையலாகாதெனக் கருதுவோரும் நமக்கு அப்படிச் செய்யவே கருதுவார்கள்; இது இயற்கை. அந்தோ! நாமோ அதற்கிடங் கொடாமல் ஒற்றுமையாக விருந்து வேலை செய்வதற்கு மாறாக இல்லாத கட்சியையும் புதிதாக உண்டாக்கிக்கொண்டு எதிரிகளுக்கு உதவிசெய்து நமக்கு நாமே தீங்கிழைத்துக் கொள்கிறோம்.

நமது செய்கைகள் பிறர் நகைப்பதற்கு இடமாக விருக்கின்றன. ஒன்று பாருங்கள்! இதுகாறும் சம்பந்தப்படாதிருந்த பக்கத்து வீட்டுக்காரனோடு உறவு செய்து கொண்ட ஒருவன், தன் வீட்டில் தன் சகோதரனோடு, பிறந்தது முதல் ஒற்றுமையாக விருந்துவிட்டு, இப்போது துவேஷம், செய்து கொண்டால் அப்படிப்பட்டவனை அறிவாளிகள் என்னென்று மதிப்பார்கள் என்பதை நண்பர்களே சற்று சிந்தியுங்கள்.

நெடு நாட்களாக நம் நாட்டில் இந்துக்களுக்கும் மஹம்மதியருக்கும் ஒற்றுமை கிடையாது. இது நம் தாய் நாட்டின் முன்னேற்றத்திற்கு இருந்த இடையூறுகளில் ஒன்று. நாம் முன்னேற்றமடையலாகாது என்ற நோக்கமுடையோர்க்கு இது அனுகூலமாக விருந்ததென்பது நாம் கூறுமலே அறியக்கிடக்கிறது. இம் மஹம்மதியர் மதம், ஜாதி, ஆசாரம் யாவற்றிலும் நமக்கு மாறானவர்கள். அப்படியிருந்தும் ஏதோ நம் தாய் நாட்டிற்கு நற் காலம் பிறக்க வேண்டிக்கடவுள் தயவால் இந்த இரண்டு ஜாதியாரும் இப்போது மிக்க ஒற்றுமை யடைந்து விட்டார்கள்; இது சந்தோஷத்தை யளிப்பதும், புகழ்ச்சியை யுண்டாக்குவதுமான விஷயமாக விருக்கிறது.

அந்தோ! ஜாதி மதம் முதலிய யாவற்றிலும் முற்றும் மாறான வர்களோடு ஒற்றுமை யுண்டாக்கிக்கொண்ட நாம், நமக்குள் ளேயே என்று மில்லாத பிரிவினையை யுண்டாக்கிக் கொண்டோம். இதனால் மஹம்மதிய சகோதரரோடுஒற்றுமையுண்டாக்கிக்கொண் டதைக் குற்றமென்று நாம் கூறுவதாக நினைக்கலாகாது. இந்த ஒற் றுமை யேற்பட்டது இருதரத்தார்க்கும் மிக்க சந்தோஷமும் அனு கூலமுமானதே. ஆனால், இத்தகைய புகழத்தக்க காரியத்தைச் செய்த நாம், இது காறும் பிரிவினை யேனும் துவேஷமேனும் இல் லாதிருந்த நமக்குள்ளேயே பிராம்மணர், பிராம்மணரல்லாதார் என்ற இரண்டு கட்சிகளாகப் பிரிவினை யுண்டாக்கிக்கொண்டது அழகா? அல்லது நம் தாய் நாட்டின் முன்னேற்றத்திற்கு அனு கூலமானதா? என்பதற்கே அதைக்கூறினோம். இந்த நவீன சிருஷ் டியாகிய பிரிவினையால் இதுகாறுமே எவ்வளவு தீங்குண்டா யிருக் கிறதென்பது அறிவாளிகள் அனுபவமாக வறிந்ததே. மனிதன் தவறு செய்வது இயற்கையே. ஆனால், அதனால் இடையூறு நேர் கிற தென்றுணர்ந்த பின்னேனும் அத்தவறான நடக்கையை யொழி த்து விடுவதே அறிவாளியின் செய்கையாகும்.

பிராம்மண ரல்லாதார் முன்னேற்றமடைய முயலவேண்டியது அவசியமே. ஆனால், அதற்காக இருவர்க்குள்ளும் துவேஷத்தை யுண்டாக்கிக் கொள்வது இருவர்க்கும், அதாவது நம் தாய்நாட் டிற்கே பெருந் தீங்கை யுண்டாக்குவதாகும் என்பது உண்மை. பிராம்மணரல்லாதாரின் முன்னேற்றத்திற்கு முயற்சி செய்ய முத லில் ஆரம்பித்தவர்கள் யாராயினும் ஆகுக. அவர்கள் தங்கள் முயற்சியோடு இருதரத்தார்க்கும் துவேஷமும், வெறுப்பும் உண் டாகும்படி இடங் கொடுத்தது அறிவாளிகளின் செய்கை யல்ல வென்றே கூறுவோம். ஹிந்து என்ற புருடனுடைய பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நான்கு கரங்களும் வல்லமை யுடையனவாக விருந்தால்தான் அம்மனிதன் வல்லமை யுடையவ னாகித் தன் காரியத்தில் ஜெயமடைவான். ஒருகரம் மட்டும் வலிமை யுடையதாய் மற்ற மூன்றும் மெலிவடைந்திருந்தால் பயனில்லை. அந்த மூன்றுக்கும் வலிமை யுண்டாக்கவேண்டியதே; ஆனால் அந்த மூன்று கரங்களும், வலிமையுடைய ஒரு கரத்தோடு துவேஷங் கொள்வது ஆளுக்கே மோசமல்லவோ.

இப்போது பிராம்மணர்கள் பிரத்தியேகமாகச் சபை கூட வேண்டுமென்று சிலர் பிரேரேபணை செய்வதாகவும், வேறு சிலர் அப்படிச் செய்வது கெடுதி யென்று ஆக்ஷேபனை செய்வதாகவும், அப்படிச் செய்வதிலும், பிராம்மணர், பிராம்மணரல்லாதார் ஆகிய இருதரத்தாரிலும் பிரமுகர்களாகிய சிலர் ஒரு சபை கூடி நமக் குள்ள பேதங்களை யொழித்து ஒருமித்து நடப்பதுதான் நமது

முன்னேற்றத்திற்கு அனுகூலமாகுமென்றும் திருப்பதியிலுள்ள பிரம்மஸ்ரீ டி கே. துரைசாமி அய்யங்கார் என்பவர் பிராம்மணர்களும், பிராம்மணரல்லாதாரும் என்ற தலையங்கத்தின் கீழ், 1921ஞு ஜனவரிமீ 29உ வெளியான ஹிந்து பத்திரிகையில் தக்க காரணங்களோடு வெளியிட்டிருக்கிறார்.

நம் தாய்நாடு க்ஷேமமடையவேண்டுமென்ற எண்ண முடைய எவரும் அதைக்கவனித்து அம்முயற்சி நடை பெறுவதற்குவேண்டிய சாதனங்களைச் செய்யாமலிரார்கள். பிரிவினையால் தீமையன்றி நன்மை யொருபோது முண்டாகா தென்பது யாவருமறிந்தவிஷயம். சுய நலத்தையும், கௌரவத்தையும், அதிகாரத்தையும் இச்சியாது, நமக்குள்ள சில்லரை வித்தியாசங்கள், சச்சரவுகள், பொறாமை முதலிய யாவற்றையும் வைராக்கியம் என்ற மண்ணில் மறைத்து விட்டு, தாய் நாட்டின் முன்னேற்றம் என்ற ஒன்றில் மட்டும் நாட்டம் வைத்து ஒவ்வொருவரும் அதற்காகத் தம்மாலான ஊழியத்தைச் செய்தால் எத்தனை ஜாதி மத பேதங்களிருந்தாலும் ஒற்றுமையும், அதனாலாய பயனும் தாமே சித்திக்கும் என்பது திண்ணம்.

ஆத்மஞானம் இப்பாரத பூமியில் என்றும் பிரகாசிக்கும் வண்ணம் அருள்புரிந்துவரும் சச்சிதானந்தப் பரம்பொருளாகிய பரமன் இத்தகைய சமையத்தில் நம் நாட்டாருக்கு அனுகூலமான ஆலோசனையைத் தந்து ஆதரித் தருள் புரியுமாறு அனைவரும் பிரார்த்திப்போமாக. ஓம் தத் ஸத்.

---

## பள்ளிக்கூடத் தோட்டம்.

பிரதி பள்ளிக்கூடங்களிலும் சிறு தோட்டம் வைப்பது அவசியமேயாகும். அத்தோட்டத்தில் செய்யும் செடி, கொடி, பயிர் வகைகளெல்லாம் சுமார் ஒரு வருஷத்திற்குள்ளாகவே அறுவடையாகும்படியாகவே யிருக்கவேண்டும். அப்படி யிருப்பதால் பள்ளிக்கூட மாணவர்கள் மேற்படி தாவரவகைகள் ஒவ்வொன்றும் பலன் தரும் காலம், அக்காலங்களில் தாவரங்கள் இருக்கும் நிலைமை, முதலியவைகளை அறியலாம்.

2. அப்படித் தாவரங்களை வைத்துப் பயிர் செய்வதில் பிள்ளைகளுக்குச் செடிகளின்மேல் உண்டாகும் கருணை, ஜீவகாருண்யம், தர்மம் ஆகிய இச்செய்கைகள் விருத்தியடையும். மேற்படி தாவரங்களுக்குத் தகுந்த நிலம் ஏற்படுத்தலும், இடையூறுவாராதவண்ணம் களைகொத்துதலும், அவை வாடிச் செத்துப் போகாதவண்ணம் சமயத்தில் தண்ணீரும், எருவும் தருதலும் ஆகிய இத்யாதி தொழில்களில் பிள்ளைகளுக்கு அனுபவமுண்டாகும்.

3. மேற்படி தாவரங்களில் உற்பத்தியாகும் காய், பூ இவைகளைக் கண்ட மாத்திரத்தில் பிள்ளைகளின் மனதுக்கு ஓர் சந்தோஷமும் அவைக

ளைப் பயன் படுத்தத் தக்க முறைகளைக் கற்றுக்கொள்ளுவதில் விருப்ப மும் உண்டாகும்.

4. மேற்படி தாவர வகையராக்கள் பயிர் செய்வதால் சுகாதார விதியின்படி அவை கெட்ட காற்றை உட்கொண்டு பிராணவாயுவை நமக் குத் தந்தும் நாம் விடும் கரியமல வாயுவை அவை உட்கொண்டும் நமக்கு உயிராதாரமா யுதவுகின்றன.

5. தாவரங்கள் பள்ளிக்கூடத் தோட்டத்திலிருப்பதால் அவை வெ யிற்காலங்களில் பள்ளிக்கூடத்துள் அநேக பிள்ளைகள் புழுக்கத்தால் அவ ஸ்தைப்படாவண்ணம் குளிர்ந்த காற்றைக் கொடுப்பதுடன் பூக்கள் நிறை ந்த காலத்தில் மனச் சந்தோஷத்தையும், நறுமணத்தையும் அளிக்கும். இவற்றைக் கண்ட மாணவர்கள் அதிக சந்தோஷ முகத்துடன், வீதியி லும், வீடுகளிலும் நினைத்தபடி ஓடியாடித் திரியும் துற்குணத்தை நீக்கிப் பள்ளிக்கூடம் வந்து சேரும் நல்ல வழக்கத்தை அனுசரிக்கிறார்கள்.

6. மேற்படி தோட்டத்தால் உபாத்திமார்களும் பிள்ளைகளுக்குச் சொல்லும் சித்திரம், கதை, பாட்டு ஆகிய இவைகளுக்குச் சமயோசிதமாய் திருஷ்டாந்தப்படுத்திக் காட்ட அதிக சவுகரியம் ஏற்படும்.

7. இப்படித் தாவரவகைகளைப் பள்ளிக்கூடத் தோட்டத்தில் வைத் துப் பழக்குவது, ஒரு சமயம் தற்போது உபாத்தியாயருடைய அனுமதிக் குட்பட்டுப் பிள்ளைகள் செய்வதாயிருப்பினும், பின்னால் மேற்படி பிள்ளை கள் பெரியவர்களாகி ஒவ்வொருவருக்கும் விவசாயத்தில் பற்றுண்டாகி, "மேழிச்செல்வம் கோழைபடாது" என்னும் முதுமொழிப்படி பயிர்த் தொழிலையும் செய்து ஜீவிப்பார்களென்ற நோக்கமுள்ளதாகும்.

8. சிலர் பள்ளிக்கூடத் தோட்டம் அவசியம் என்று சொல்லுகிறார் களேயென்று உபாத்தியாயர்கள் தத்தம் சொந்த உபயோகத்தைக் கருதித் தமக்கிஷ்டமான பயிர்களை மிதமில்லாமல் வைத்துப் பிள்ளைகளை இம்சிப் பதுகூடாது.

9. பள்ளிக்கூடத் தோட்டத்தைப் பள்ளிக்கூடத்தில் பிள்ளை கள் இருக்கும் சக்திக்குத் தக்கவாறு அமைக்கவேண்டும். பிள்ளைகளுடன் உபாத்தியாயரும் கலந்து வேலைகள் செய்யவேண்டும்; தாவரங்களில் பள் ளிக்கூடத்திற்கு வேண்டிய செடிகளை அதாவது, சாமந்தி, மல்லிகை, பத் ராக்ஷை, க்ரோட்டன், காசலரி, தங்கலரி, கொத்துமல்லி, வாழை முதலிய வைகளையும் இன்னும் ரோஜாமுதலிய அழகியபூவகைகளையும்தான் வைக்க வேண்டும். இவைகளுக்கு 15 தினத்திற்கு ஒரு தடவை கொத்திவிடுதலும் கூடுமானால் பிரதி தினமும் இல்லையேல் வாரத்தில் 2 அல்லது 3 தடவை யும் தண்ணீர்விடவும்வேண்டும். தோட்டவேலைகளை நினைத்தவேளைகளில் செய்யாமல் காலை 6-மணிக்குமேல் 7½-மணிக்குள்ளும், மாலை 4½-மணிக்கு மேல் 6-மணிக்குள்ளும் செய்யச்செய்வது சரியான காலமாகும். இவ் வேளைகள் தவறில் தேகசிரமமும், மற்றபாடங்களுக்கு இடைஞ்சலும், அரு வருப்பும் ஏற்படும். இது சகல நேயர்களுக்கும் தெரிந்த விஷயமே.

ஆகவே நம் நேயர்களாகிய எல்லாப் பள்ளிக்கூட உபாத்திமார்களும் சிறிது சிரம மேற்கொண்டு தத்தம் பள்ளிக்கூடங்களில் பள்ளிக்கூடத்

தோட்டம் அவசியம் ஏற்படுத்திப் பிள்ளைகளுக்கு மேல்சொன்ன சந்தோஷத்தை உண்டுபண்ணிச் சுகத்தைத் தேடிவைக்கும்படி மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன். தவிர, மேற்படி விஷய முயற்சியால் நம் கல்வியிலாகா அதிகாரிகளும் நம்மேல் அதிக திருப்தியும் அடைவார்கள் என்பது திண்ணம்.

M. V. துரைசாமி அய்யர், சிங்கிபுரம்.

---

## சூதினுல் வரும் தீமைகள்.

சகோதர சகோதரிகாள்!

பூர்வத்தில் நாம் செய்த புண்ணியத்தால், நமது அஞ்ஞானத்தையோட்டி, மெய்ஞ்ஞானத்தைப் போதிக்கவரும் ஆனந்தபோதினியின் கண், மேற்கண்ட தலைப்பை ஒட்டி,ச் சில விஷயங்களை எழுதத் துணிந்தேன். என்னிடத்தில் உள்ள பிழைகள் பெருமலைபோலத் தோன்றும் எனினும், "நல்லார் பிறர்குற்றம் நாடார்" என்னும் எண்ணம் தூண்டுதலினுல், நான் இதை எழுதத் துணிந்தேன்.

இக்காலத்தில் நடக்கும் சில சீர்கேடான விஷயங்களைக் காணும்போது, நமது தாய்நாட்டின் க்ஷேமத்தைக் கோரும் ஒவ்வொரு தேசாபிமானியும் மனம் நொந்து உளங்குன்றுவான் என்பதற்கோர் ஐயமும் இல்லை. சில செல்வவந்தர்களோ,நமது தாய்நாடு கூடியசீக்கிரத்தில் கெடும் பொருட்டு, குலதர்மத்தையும் கைவிட்டு, மற்றும் பாவச் செய்கைகளைச் செய்கிறுர்கள். முயற்சி யில்லாமல், பழிபாவங்களை விளைவிக்கும் வழியில் பணம் சம்பாதித்து ஜீவிப்பதைவிட, நல்ல முயற்சியினுல் கிடைக்கும் பொருளை வைத்து, தரித்திரத்தை அனுபவிப்பதே நலம்.

பெருமுத்தரையர் பெரிதுவந் தீயும்
கருனைச்சோ றுர்வர் கயவர்—கருனையைப்
பேரு மறியார் நனிவிரும்பு தாளாண்மை
நீரு மமிழ்தாய் விடும்.--என்று சொல்லியிருக்கிறுர்(நாலடியார்.)

தாய் நாட்டிலுள்ள மானிடர்கள் செய்யும் பாபச் செய்கைகளில், சூது விளையாடல் ஒன்றுகும். இன்னும் அனேகர்கள் இதையே முதற்றொழிலாக வைத்துக்கொண்டு, ஜீவித்து வருகிறுர்கள். இவர்களைக் காணும்போதெல்லாம் என் மனம் எரிகின்றது. ஈசனே! ஈசனே!! இத்தகைய மதிகேடும் நம்மவர்க்கு வருமோ? இது வெறும் பொய்யனுக் கருந்துணை; மெய்யனுக்குறும் பகை என்று இவர் உணர்கின்றுரில்லை. இவ்வாறு விளையாடுவானேன்? போலீஸார் வசம் கைச்சிறை யாவானேன்?பின்னும் உதைகள் படுவானேன்? மானமழிவானேன்? இவைகளெல்லாம் இச் சூதினுலன்றே?

இவ்வாருக ஒருவன் விளையாடுவதற்கு முன், "நாம் சூது விளையாடலாமா? இது கேவலமன்றே, பணத்தை யெல்லாம் இழந்து ஆண்டியாக வேண்டிய திருக்குமே, பின்னும் உறவினர்களும், சிநேகிதர்களும், நம்மை

இகழ்வார்களன்றோ” என்று முதலிலே கருதுகின்ருனு? இல்லவே இல்லை. இதைக் கருதியே வள்ளுவர்

“ எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு”

என்று சொல்லி யிருக்கிருர். சூதாடுவோர்கள் இதனைக் கிஞ்சித்தேனும் கவனிக்கிருர்களா? அய்யோ! பாவம். உதாரணமாக நிடதநாட்டரசனை நளன், புட்கரனோடு சூதாடுகையில், முதலில் பொன்னைப் பந்தயமாக வைத்து ஆடினன். பின்பு, ஆடையாபரணங்களையும், ரதகஜதுரக பதாதிகளையும் வைத்து ஆடுகையில், நளனே தோற்றனன். அப்பொழுது மந்திரிமார்கள் வந்து,

“ உருவழிக்கும் உண்மை உயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கும் மானஞ் சிதைக்கும்—மருவும்
ஒருவரோ டன்பழிக்கும் ஒன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து”

எனப் பலவாறு சொல்லியும், நளன் கேட்கவில்லை. கடைசியாக “உன் மனைவி, தமயந்தியைப்பந்தயம்வைத்து ஓர் ஆட்டம் ஆடு” என்றுபுட்கரன் சொல்லவும், புண்ணில் தீக்கோல் நுழைந்ததுபோ லிருந்தது நளன் மனம். இதைக் கேட்கவும், அவன் ஒற்றை வஸ்திரத்துடன், தன் மனைவியோடு, கானகத்திற்குச் சென்ருன். இவைகளெல்லாம் சூதினுலன்றோ?

ஆகையால், சூதுவிளையாடுவதினுல் பொன்னையும், ஆடையாபரணங்களையும், பின்னும் மனைவியையுங் கூட இழக்கவேண்டியதா யிருக்கும். பின்னும் நம்முடைய மானமும் போய்விடும். “ மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே” என்றபடி மானமழிந்தபின் வாழவும் வேண்டுமா? ஆதலால் ஆண்டவன் அளித்த அற்பாயுளில் வாழ்நாட்களை வீணுக்காமல், சூது, களவு, பொய், முதலியவற்றை விட்டுவிட்டு, மறுமைக்கு வேண்டிய தான தருமங்களைச் செய்து, எல்லாம் வல்ல பரம்பொருளை அனுதினமும் ஆராதிப்போமாக: சுபம். சுபம்.

K. கிருஷ்ணன், எட்டியாபுரம்.

---

## வீண் செலவு

வீண்செலவு செய்வது அவ்வாறு செய்வோரை மிகத்துன்பத்தி லழுத்திவிடும். வீண்செலவு செய்துகொண் டிருப்போரும் ‘அது அடாத செய்கை’ யெனவே அறைகின்றனர். பிறரையும் அவ்வாறே இகழ்கின்றனர். தம் குற்றத்தைத் தாம் உணர்வதில்லை.‘ஒற்றைக்கண்ணை யிகழ்வது பொட்டைக் கண்ணினியல்பு’ போலும். வறியோரும் சுபாசுப காலங்களில் வீணுடம்பரக்காரரான சில செல்வரைப்பார்த்து, புலியைப் பார்த்துப் பூனையும் சூடிக்கொள்வதுபோல், விரலுக்குத் தக்க வீக்கம்போ லிராமல், அனுவசியமான செலவுகளை ஊர்மெச்சச் செய்துவிட்டு முடிவில் கடன்காரரைக் கண்டால் காலனைக் கண்டதுபோல் பயந்து ஒளிகின்றனர். இது விஷயமாய்ப் பல பத்திரிகைகளும், பலநூல்களும், பிரசங்கமேடை

களும் பன்னிப் பன்னிப் பாடிக்கொண்டே யிருக்கின்றன வெனினும், அதனுல் எவ்வகையான பயனையேனும் அடைந்தனவோ வென்பதையறி யக்கூடவில்லை. 'ஆனமுதலி லதிகம் செல வானல், மான மழிந்து மதி கெட்டுப், போனதிசை-யெல்லார்க்குங் கள்ளனய் எழ்பிறப்புந் தீயனய், நல்லார்க்குப் பொல்லனு நாடு,'பொருடனைப்போற்றிவாழ்,' என்பனபோ ன்ற நீதி மொழிகளை யறியாதாரும், அறிந்து மதியாதாரும் தங்கள் காரி யத்தை நடத்திக்கொண்டே செல்கின்றனர்; வீண்செலவு செய்யலாகா தேயன்றி, வீணல்லாத பிரயோஜனகரமானதும், தமக்கும் பிறர்க்கும் உப யோகமான செல்வத்தைப் பெற்றதா லடையவேண்டிய இம்மைமறுமைப் பயனுகிய நன்மையைத் தரத்தக்கதுமான செலவுகளைச் செய்தே தீரவே ண்டும். "செய்தக்கவல்ல செயக்கெடும், செய்தக்க செய்யாமை யானுங் கெடும்," என்னு முணர்வில்லாத லோபியரென்னும் பட்டதாரிகள், பண த்தைச் சிக்கனமாகப் பாடுபட்டுத் தேடிப் புதைத்துவைத்துக் காப்பாற்று கின்றனர். இவர்கள் விஷயத்தில் வீண்செல வென்பது முயற்கொம்பே. முன்னேரைநோக்க இன்னேர் ஓர் வகையிற்சிறந்தவராவர். ஆனலும் இத் தகைய லோபிகளும் தங்கள்பொருளை, மிக்க அருமையான பொருளைச் செலவுசெய்து விட்டால் மீட்டும் அடையக் கூடிய செல்வத்தைப் போல ன்றித் தேடப்படும் பொருளைச் சிக்கனமாகப் புதைத்துக், கோடிக்கொன் ளுக்க் கொள்ளுகினும் கொள்ளக்கிடையாக் கரும்பொருளை வீணுகக் கொல்லுகின்றனர். ஊதாரிகளோ இதன்விஷயத்தில் சிக்கனமாயிருப்பர்; இல்லையில்லை: ஒரு காலுமில்லை. அதற்காக விசனிக்கவேண்டிய காலமும் வரும். அப்பொழுது செய்யத்தக்கது யாதுளது? மீளாத்துன்பத்தை யனு பவிக்க வேண்டியதே. செல்வ மப்படியல்ல. பத்து ரூபாய் மாதவருமான முள்ள ஒருவன் அதிகமாக ஐந்து ரூபாய் செலவிட்டு விட்டால் எவ்வித முயற்சியாலாவது அக்கடனைத் தீர்த்து விடலாம். ஈண்டுகூறப்படும் பொருள் அத்தன்மையதன்று. ஆகையால் இதனையோ வீண் செலவாகா வண்ணம் பார்த்துக்கொள்ள வேண்டும். ஆயின் இஃது பொருளைப் போ லன்றி நம்மையு மறியாமல் நம் கட்டுக்கடங்காமல் செலவாய்க் கொண்டே தானிருக்கும். அதை நல்லவர் வீண்செலவாகாமல் உபயோகமுள்ளதாகப் பார்த்துக் கொள்ளவேண்டும்.

அப்பொருளெது? அதுதான் காலம் - நமது ஆயுட் காலம். இதன் தன்மையை யறியாது, பொழுது போகவில்லையே, சனிபோன்ற நாட்கள் எப்போதுதான் ஒழியுமோ? என்று வருந்துவோர் எத்தனைபேர். காலம் என்ன வேகமாக ஓடுகிறது. இன்றிரா வொழிந்தது; நம் காலத்தில் நாள் குறைந்தது. நமது காலத்தைக் கணக்கிடுபவனுன காலன், சூரியனையே அளவு கருவியாக்கொண்டு அளந்துகொண்டே யிருக்கிறன். ஒட்டிய இள மையில் ஒரைந்து நீங்கும்; ஆக்கையிளமையால் ஐம் மூன்று நீங்கும்; இர வில் துயிலாலொருபாதிமாயும். எஞ்சியுள்ள காலமும் பிணி மூப்புகளுக் குட்படும். எல்லாம் கழிய நின்றிருப்பது ஒரு சிறிதே. அதுவும் இவ்வள வென்று நிச்சயமாய் அறியக்கூடாதது. இப்போதோ, பின்னையோ, இன்னும் சற்றுநேரத்திலோ எப்போதோ? பின்புறமாகவே விழித்தகண் மூடாது சர்வ சாக்கிரதையோடிருக்கும் மறலி தோளின்மீது கைபோட் டுப்பிடிப்பது. இவ்வளவு குறுகிய காலத்தில் செய்யவேண்டிய வேலை

யென்ன ? பெறுதற் கரிய பிறவியைப் பெற்றதன் பயனையடைய முயல வேண்டுமன்றோ? இவ்வுண்மைகளை யறிந்த பெரியோர் உடல்கடுங்கி ஒரு நொடிப்போதையும் வீண் போக்காது, இம்மை மறுமைக்குரிய அறவினை யைப் புரிந்து பயனை யடைந்தும் அடைந்து கொண்டு மிருக்கின்றனர்.

"இன்றருணோ தயங்கண்டோ முயர்ககன
முகட்டின்மிசை யிந்தப் பானு
சென்றடைய நாங்காண்ப தையமதைக்
காண்கினுமேற் றிசை யிருக்குங்
குன்றடையு மளவுநா முயிர்வாழ்வ
தரிததன்மேன் குறுகுங் கூற்றம்
என்றச்சத் துடன்மனமே மறவாம
லறவழிபி லேகு வாயே''......என்றபடி

உடனே வந்த வேலையை முடித்துக்கொள்ளவேண்டும். மாலைச் செய் வோம், நாளைச்செய்வோ மென்னில், மாலைகிடந்தானெழுதலரிது. நாளை நம்முடை நாளோ, நமனுடை நாளோ! ஆகையால் லௌகிக சம்பந்த மான விஷயங்களைச் செய்யும்போது அதிலேயே அழுந்திக்கிடக்காமல் வேண்டிய வளவு செய்துகொண்டு மற்றக் காலங்களிலெல்லாம் கடவுள் தியானம், அறநெறி முதலியவற்றிலேயே நாட்டத்தைச் செலுத்துவது அத்தியாவசியகம். கண்கெட்ட பிறகு சூரியநமஸ்காரம் எதற்கு? எப்படித் தலையில் நீர்க்குடத்தை வைத்துச் செல்லுந் தாதியானவள் குடத்தைக் கைகளாற் பற்ருது, பல விளையாட்டுக்களைச்செய்து, கைகளை வீசிக் கொண்டு நடந்தாலும் "எங்கே நீர்க்குடம் தவறி விழுந்து விடுமோ'' என்று அதன் பேரிலேயே கவனத்தை வைப்பாளோ' அதைப்போலவும், சோரநாயகி யொருத்தி தன் வீட்டில் எவ்வித தொழிலைச் செய்யினும் தன் சோரநாயகன் மீதே எவ்வாறு கவனத்தைச் செலுத்துவாளோ அவ் வாருகவும், என்ன தொழிலைச் செய்துகொண்டிருப்பினும், இம்மை மறு மைக்குரிய பயன்களைப் பெறுவதிலேயே நாட்டமுடையோரா யிருப்பது யாவர்க்குங் கடப்பாடாகும்: அருமையான காலத்தை வீண் போக்காது பரோபகாரம், நூல்களைக்கற்றல், போதித்தல், நாட்டிற்கான நன்மைபுரி தல், கடவுள் தியானம் முதலானவைகளில் செலவிட்டோமாளுல் அது வீண் செலவாகாது. வித்துவான்கள் (வித்=ஞானம்) தங்கள் காலத்தை எவ்வெவ்வகையிற் செலவழித்தனர் செலவழிக்கின்றனர், என்பதை யறி ந்து அவ்வழியைப் பின்பற்றவேண்டும். சிறிதேயாயினும் உள்ளது கொண்டு நல்லது செய்யவேண்டும்.

தேடப் படும்பொருளைச் சிக்கனமா கப்புதைத்துக்
கோடிக் கொருமிடங் கொள்ளுகினும்—கூடாத
வாணாளை வீண்கழிக்கும் மானிடரைப் போன்மயக்கம்
பூணார்பொய் கண்டுதுறப் போர்......(ஒழிவி லொடுக்கம்).

பூ. ஸ்ரீனிவாசன்,
தமிழ்ப் பண்டிதர், இராணிப்பேட்டை.

# ஸ்ரீமத் இராமாயணத்தைப் பற்றி வேதாந்தங்களின் கொள்கை.

இப்பாத கண்டத்தில் மகிமையும், மேன்மையும் பொருந்திய இதிஹாசமாகிய சக்கிரவர்த்தி திருமகனார் சரித்திரத்தை யறியாதவர்கள் ஒருவரும் இல்லை. ஐந்துவயதுக் குழந்தைகூட இராமாயணத்தின் சாராம்சத்தைச்சொல்லும். இத்தகைய சரிதையை மகாதபோசிரேஷ்டரான ஸ்ரீமத் வான்மீகி வடமொழியில் எழுதியுளார். தென்மொழியில் கவிச் சக்கிரவர்த்தியாகிய கம்பர் பாடியுள்ளார்.

பூர்வீகத்தில் தேவர் முதலிய ஏனையோர், கொடிய இராக்கதர்களுடைய கொடுமைகளைச் சகிக்க மாட்டாதவர்களாகி வைகுண்ட வாசியாகிய நீலமேக சாமளரூபனான ஸ்ரீமத் சாக்ஷாத் விஷ்ணுவை யணுகித் தமது குறையைத் தீர்க்க வேண்டுமென்று பிரார்த்திக்க, அதற்கு அவர் திருவுளமிரங்கி அப்படியே பூலோகத்தில் தாம் ராமராகவும், சக்கிரம் பரதனாகவும், சங்கு சத்துருக்கனாகவும், ஆதிசேஷன் இலக்ஷ்மணராகவும், தசரத மகாராஜாவிற்கு புத்திரராக ஜனித்து இராவணனைச் சங்காரம் செய்கிறோம் என்று வாக்களித்தனர். தேவர்கள் சந்தோஷமானார்கள்.

முறையே பிறந்து, வசிஷ்டரால் சகலமும் தெரிந்துகொண்டு, விஸ்வாமித்திரரால் மிதிலைக்கு அழைக்கப்பெற்று அங்கே வில்லை வளைத்து, ஜனகமகாராசனது புத்திரி ஜானகியை ஸ்ரீராமர் மணம் செய்துகொண்டு வாழுநாளில் சிற்றன்னை உத்தரவின்படிக்கு உத்தமபரதனுக்கு நாட்டையளித்து, தான் தம்பி இலக்ஷ்மணரோடும் சீதையோடும் 14 வருஷம் ஆரண்யவாசம் செய்யுங்காலை, இராக்கதனாகிய இராவணன் சீதையை எடுத்துத் தனது இலங்கைக்கேக, அதை யறிந்து ஸ்ரீராமபிரான் தமது வானர சேனைகளுடன் இலங்கைக்குச் சென்று இராவணனைக் கொன்று சீதையை மீட்டுவந்து அயோத்தியா புரியில், மண்ணுலகமும், விண்ணுலகமும் புகழ அரசாட்சி செலுத்திப் பூலோகத்தில் தமது நடக்கையினால் அநேக நீதிமுறைகளை நிலைநாட்டித் தாம் வந்த காரியம் முடிந்த பிறகு வைகுண்டத்தில் விஷ்ணுவாய் எழுந்தருளினார் என்பது இராமாயணச் சுருக்கம்.

இத்தகைய இராமாயணத்தைப் பற்றி வேதாந்தங்களின் கொள்கை கீழ் வருமாறு:—

மோக்ஷமென்னும் அயோத்தியில் பிரம்மமென்னும் தசரதன், ஞானசக்தி, இச்சாசக்தி, கிரியாசக்தி, யெனும் மூன்று மனைவியருடன் கூடி வாழ்கையில், ஞானசக்தி என்னும் கௌசலையின் கர்ப்பத்தில் ஆத்மாவென்னும் ஸ்ரீராமர் பிறந்து, அவ்வியக்தம் என்னும் பால்யத்தால் தன்னை மறந்து, அஞ்ஞான மயனான சீவனே தானாகத் தேகேந்திரியாதிகளுக்குக் கோனாகிச் சிரவண மென்னும் வசிட்டரை யடைந்து, மனனமென்னும் விஸ்வாமித்திரரைத் தொடர்ந்து, வைராக்கிய மென்னும் இலக்ஷ்மணருடன் நடந்து, பஞ்சமாபாதகமெனும் பர்வதங்கள் காடுமலை வனாந்திரங்களைக் கடந்து, ஆத்மா ராமனென்னும் பரமேட்டி, ஞான மென்னும் பாணத்தைத் தீட்டி, ஆவரணமெனும் தாடகையை மாட்டி, அடியோடு இறந்துபோக வாட்டி, இச்சையெனும் மாரீசனுக்குப் பயங்காட்டி, என்

னெதிரில் வந்தால் சாவாயென்றோட்டி, விபசாரமென்னும் பாறையை மிதித்து, ஆசார மென்னும் அகலிகையைத் துதித்து, ஏகாந்த மென்னும் மிதிலையிற் சேர்ந்து, சாந்த மென்னும் ஜனகரைச் சார்ந்து, பொறுமை என்னும் கார்முகத்தை யொடித்து, ஆநந்த மென்னும் ஸ்ரீ ஜானகியின் கைப் பிடித்து, மதமெனும் பரசுராமனை எதிர்த்து, மோக்ஷ மென்னும் அயோத்தியிற் புகுந்து, ஜீவன் நானல்லவென்று வந்து பிரம்ம மென்னும் தசரதனைக்கூட, ஜீவத்வமறலென்னும் மகுடாபிஷேகத்தை, நாடக் கிரியை எனும் கைகேயினுடைய சலன மென்னும் ஏவல் வந்தடைய, பிரம்ம மென்னும் தசரதனைப் பிரிந்து, மோக்ஷ மென்னும் அயோத்தியைத் துறந்து, வைராக்கிய மென்னும் இலக்ஷ்மணருடனே ஆநந்த மென்னும் வேதகையுடனே சித்த மெனும் சரயூ நதியைத்தாவி, புத்தி என்னும் குகன்றனை மேவி, விட்சேப மெனும் வனத்தினுட் சென்று, தப மென்னும் சித்திரகூடத்தில் நின்று, அகங்கார மெனும் விராதனைக் கொன்று, மனமெனும் காகாசூரனை வென்று, சங்கல்ப மென்னும் கண்ணைக் கெடுத்து, விகல்ப மென்னும் கண்ணைக் கொடுத்து, வீரமென்னும் அகஸ்தியரைக் கண்டு, தீரமென்னும் அஸ்திரம் பெற்று, காமமென்னும் சூர்ப்பநகையைத் தண்டித்து, ஆகாமிய மென்னும் கரதூஷணதியரைக் கண்டித்து, இச்சை யெனும் மாரீசனாலே, ஆநந்த மென்னும் சீதை யைப் பிரிந்ததாலே, இராசத மென்னும் இராவணனடுத்து, ஆநந்த மென்னும் சீதையை யெடுத்து, இன்பமெனும் வைதேகியை யுருக்கும், துன்ப மெனும் இலங்கையி லிருக்கும் அசுபவாசனை என்னும் இராக்கதர் மொய்க்க, எண்ணமெனும் அசோகவனத்தில் வைக்க, ஆத்மா வென்னும் ஸ்ரீராமர்கடுகி, இச்சை யெனும் மாரீசனைமுடுகி, நிராசை என்னும் பூமியின்மேல் சாய்த்து என்றைக்கும் தன் முன் வாராமல் மாய்த்து, ஆநந்தமென்னு மைதுலியார் இல்லாமல் ஆத்மராமன் மனம் நொந்து, வைராக்கிய மென்னும் இலக்ஷ்மணருடனே அயர்ந்து, விட்சேபமெனும் கானகத்தில் அலைந்து, சிந்தனை என்னும் கவந்தனைக் கொன்று, சந்தோஷ மென்னும் சவரிபாற் சென்று, நிதித்தியாச மென்னும் அநுமானைக்கூடி, ஆநந்த மென்னும் சீதையைக்கிட்டி, ஜனன மென்னும் சப்த தருக்களைக் கொய்து, பயமென்னும் வாலிமேல் அம்பெய்து, அபயம் எனும் சுக்ரீவனைக் காத்து, சுபவாசனை என்னும் வானரங்களைச் சேர்த்து. நிதித்தியாச மென்னும் அநுமானைத் தூண்டி, மோக மென்னும் சமுத்திரத்தைத் தாண்டி, லோப மென்னும் இலங்கணியைத் தொலைத்து, அசுப வாசனை என்னும் இராக்கதரைக் கலைத்து, ஆநந்த மென்னும் சீதையைக் கண்டு, உல்லாச மென்னு மநுபூதி மேற்கொண்டு, எண்ண மெனும் அசோக வனத்தை யழித்து, சந்தேக மெனும் அட்சயனைக் கழித்து, விபரீத மென்னும் இந்திரஜித்தைப் பழித்து, மயக்க மெனும் பாசத்தை எதிர்த்து, இராஜசமெனும் இராவணனை எதிர்த்து, மௌன மென்னும் அக்கினியைப் பெருக்கி, துன்ப மெனும் இலங்கையைச் சுருக்கி, மோக மென்னும் வாரியைச் சுட்டு, திடமெனும் மணையினைக் கட்டி, சாத்வீக மென்னும் விபீஷணனைக் கிட்டி, இங்கே தாமஸ மென்னும் கும்பகர்ணனை வெட்டி, இது இராசத மென்னும் இராவணனை யதட்டி, விபரீத மென்னும் இந்திரஜித்தை முட்டி, மயக்க மென்னும் பலத்தால் மயக்கி, வைராக்கிய மென்னும் இலக்ஷ்மணருடன் மயங்கி, நிதித்தியாச மென்னும்

அனுமான் களிக்க, நிஷ்டை யென்னும் சஞ்சீவியை யளிக்க, வைராக்கிய மெனும் இலக்ஷ்மணர் துதிக்க, விபரீத மென்னும் இந்திரஜித்தைச் சதிரம், சஞ்சித மென்னும் மூலபல மெதிர்க்க, தீரமெனும் மோஹனுஸ்திக்க வதைக்க, அசுபவாசனை யென்னுமிராக்கதர் முடுக்க, சுபவாசனை என்னும் வானரங்கள் அவர்களைக் கெடுக்க, ஆத்மா என்னும் ஸ்ரீராமன் கடுத்து, கெம்பீர மென்னும் கோதண்ட மெடுத்து, இராசத மென்னும் இராவணனை யெதிர்த்து, ஞான மென்னும் பாணத்தைத் தொடுத்து, நானென்னும் மதத்தை யுடைத்து, தசேந்திரியங்களென்னும் தசமஸ்தகங்களை யுடைத்து ஆநந்த மென்னும் சீதையைக் கண்டு மௌனக்கினியிற் குளியென்று விண்டு, பிரம்மமென்னும் தசரதனை நாடி, ஆநந்த மென்னும் சீதையைக் கூடி, மோக்ஷ மென்னும் அயோத்தியிற் புகுந்து, ஜீவத்வமறலென்னும் மகுடாபிஷேகம் புனைந்து, பிரம மென்னும் தசரதனே தானாகி, மோக்ஷ மென்னும் அயோத்திக்குக் கோனாகி, கைவல்ய பிரம்மானந்த சொரூப சாக்ஷாத்காரமாய்ப் பிரகாசித்தார்.

பூ. அமிர்தலிங்கம்,
2-112, தம்புசெட்டி தெருவு, மதராஸ்.

---

## தமிழின் நிலைமை தாழ்ந்திருப்பதேன்?

தற்காலத்தில் ஹைஸ்கூல்களில் கல்வி பயின்று வரும் மாணாக்கர்களிலனேகர் தமிழ்ப் பாஷையின் அருமைபெருமைகளை அறியாதவர்களாயிருக்கிறார்களென்பது யாவருமறிந்த விஷயமே. இத்தகைய அறியாமைக்குக் காரணமென்ன? இது எதிலிருந்து உண்டாகிறது? என்பதைச் சற்று கவனிப்போம். ஐரோப்பாவைச்சேர்ந்த இங்கிலாந்து, பிரான்ஸ், ஜர்மனி முதலிய தேசங்களில் மாணாக்கர்கள் எவ்வாறு கல்வி பயின்று வருகிறார்கள்? அவர்கள் தாய் பாஷையையும் மற்ற பாஷைகளையும் எவ்விதம் பாவித்து வருகிறார்கள் என்பதை ஆலோசித்தால் மேற்கூறிய குறைக்குக் காரணம் நன்கு விளங்கும். அதாவது, மேற்கூறிய இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய தேசங்களில் மாணாக்கர்கள் முதல் முதல் தாய் பாஷையை அப்பியசிக்கிறார்கள். பிறகு இங்கிலீஷ் காரரா யிருந்தால் பிரான்சு, ஜர்மன் முதலிய பாஷைகளையோ, அல்லது க்ரீக், லத்தீன், முதலிய பாஷைகளையோ கற்று வருகிறார்கள். எப்படியும் அவர்கள் தமது தாய் பாஷையைக் கைவிடுவதில்லை. ஆனால் நமது பள்ளிக்கூடங்களிலோ வென்றால் முதல் மரியாதை ஆங்கிலத்திற்குக் கொடுக்கப்பட்டு வருகின்றது. தமிழ் முதலிய தாய் பாஷைகளை அவ்வளவாகக் கவனிப்பதில்லை. இதுதான் தமிழின் நிலைமை தாழ்ந்திருப்பதற்குக் காரணம்.

இனி, தமிழின் பெருமை எப்பேர்ப்பட்டதென்று சற்று கவனிப்போம். தமிழ் தெய்வ பாஷை யென்பதும், வடமொழிக்குச் சமானமானதென்பதும், அநேக இரத்னங்கள் அடங்கியுள்ளதென்பதும் யாவருமறிந்த விஷயமேயாகும். இதற்கு உதாரணமாகத் தமிழ் வேதமென்று கூறப்படும் தேவாரமென்ன, தெய்வப் புலமை வாய்ந்த திருவள்ளுவர் இயற்றிய குறளென்ன, கம்பர் இயற்றிய இராமாயணமென்ன இன்னும் இவைபோன்ற கணக்கிட முடியாத அநேக கிரந்தங்கள் தமிழ்ப் பாஷை

யில் அடங்கி யிருக்கின்றன. இது இவ்வாறிருக்க இச்சிறந்த பாஷையைக் கவனியாது விடுவது சற்றும் அடுக்காது.

இனி நாம் வேண்டிக்கொள்வது என்னவென்றால் மாணாக்கர்கள் யாவரும் தமிழின் பெருமையை யுணர்ந்து, தாங்கள் கல்வி பயிலும் பாடசாலைகளில் தமிழை அபிவிர்த்தி செய்யத் தக்க சமயம் இல்லாத போதிலும், தங்கள் ஓய்வு நேரங்களில் சிறந்த தமிழ்ப் புத்தகங்களை வாசித்தும், பத்திரிகைகளைப் படித்தும், தமிழ்ப் பாஷையை மேலும் மேலும் கற்று அபிவிர்த்தியடைய விரும்புவார்கள் என்பதே.

கே. எஸ். வெங்கட்டசுப்பன், பி. ஏ., ஷிமொக.

---

## நோய்க் கிடங்கொடேல்.

### (காபிகுடியின் கேடு)

நமது முன்னோர்கள் நல்ல திடகாத்திரர்களாயும், நோயற்றவர்களாயும், தீர்க்காயுளுடையவர்களாயும் இருந்திருக்க,அவர்களின் சந்ததிகளான நாம் மெத்த பலஹீனர்களாயும், அநேக நூதன வியாதி யுள்ளவர்களாயும், அல்ப ஆயுளுக்கு உட்பட்டவர்களாயும் ஆவதற்குக்காரணம் தற்கால நவீன படாடோப மேனாட்டு ஏமாற்றமானவைகளும் நமது தேச சீதோஷ்ணத்திற்குச் சிறிதும் ஒவ்வாதவைகளும் இந்திய தேச செல்வ நிலையைப் பெரிதும் பாதிப்பவைகளும் கொடிய பித்தோஷ்ண குணத்தை உடையவைகளும் மலபந்தரோகத்தை உண்டுபடுத்தி நூதன ரோக சம்பவத்தை உண்டு பண்ணி அல்ப ஆயுளை அளிக்கக்கூடியவைகளுமான நூதன ஆகாரங்களாகிய கோகோ, டீ, காபி முதலியவைகளை இடையறாது உட்கொள்ளும் வழக்கமேயாம்.

அதிலும் பனி, குளிர் தொந்தரவுள்ள மேல் நாட்டு மலைப் பிராந்தியங்களில் வசிப்போருக்குச் சிறிது அனுகுணமாக மேல்நாட்டு வியாபாரவர்க்கத்தாரால் கண்டு பிடிக்கப்பட்ட மேற்கண்ட எவ்விதத்தாலும் கொடிய விஷத்தன்மையை உடைய பேரினம் தெரியாத யாதொரு காட்டுக் கொட்டையைக் கறுக்கிய கஷாயத்தை உஷ்ண தேசவாசிகளாகிய நாமும் உட்கொள்ள முயன்றதால் ஏற்பட்ட அனர்த்தங்கட் கோர் அளவின்று.

மேற்படி கஷாயத்தைக் காலவரை யின்றிக் காலை மாலை நடு நிசியிலும் வயிறு நிறைந்த ஆகாரத்தின் மேலுங் குடித்துக் களித்து வருவதின் பயனாய் அவை நம்மையே சாப்பிட முயன்று நமது உடல், பொருள், ஆவி, மூன்றையும் கொள்ளை கொண்டு நமது மக்களையும் உண்ணப்பாவின்றிக்கொன்று நமது தேகத்தை அசாத்தியமான மூத்திரரோக சம்பவங்களில் ஆழ்த்தி விட்டன. அவைகளை நிவர்த்திக்துக்கொள்ளவும் நமது தேச சீதோஷ்ணத்திற்குத் தக்கவையான திரிகால ஞான உணர்ச்சியுடைய மகரிஷிகளால் கண்டு பிடிக்கப்பட்ட நமது அருமையான சஞ்சீவி போன்ற மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்படும் ஆயுர்வேத வைத்ய சாலைகளையே விசேஷமாய்க் காணோம். இப்போதுள்ள மேல் நாட்டு மருந்துகளையாவது உண்டு சுகம் பெறலாம் என்று நினைக்கினும் 'குளிக்கப் போயும் சேற்றைப் பூசிக்கொள்வதைப் போலும்' கற்பகத்தைத் தேடிப்

போய்க் காஞ்சிரங்காயை அடைந்தாற்போலும் நமது சைவ வைஷ்ண சம்பிரதாயத்திற்கும் அதி விரோதமானவைகளும் வாயினல் சொல்லவும் மெத்த அருவருப்பானவைகளுமாகிய மீன் எண்ணெய், பன்றிக்கொழுப்பு, கோழிக்குஞ்சு ரஸம், (Beef) என்கிற மாட்டு மாமிச சத்து முதலியவைகள் சேர்ந்த மருந்துகளை டாக்டர்கள் கொடுக்கிறார்கள். அவற்றையும் நிஷ்ப்பிரயோஜனமாயும், ஆசார ஹீனமாயும் ஆயுர்வேதத்தை மறந்து புதிய நவீன படாடோபத்தில் முன்னுற்றதற்கு அபராதம்போலும் ஏராளமான பொருள் கொடுத்து வாங்கி உண்ணும்படி நேரிட்டது. அப்படி நேர்ந்தும், அவைகளை உண்டும் வியாதி முற்றும் சௌக்கியமாவது இல்லாமல் கொல்லன் உலைக் களத்தில் ஊசியைப் போட்டுத் தேடும் விதமாய் இருக்கிறது. ஆகையால் நன்மையே நாடும் நற்குணம் உடையீர்! அன்பிற் சிறந்த அறிவுடையீர்! நமது ஆங்கிலக் கல்விப் பயிற்சியின் காரணமாக நாம் பெற்ற நவீன படாடோப நாகரீகத்தால் அடைந்த சுகம் போதுமென்று கருதி இனியேனும் நமது பூர்வ வழக்கம்போல் ஆகாரங்களை உண்டு நமது அருமையான சரீரத்தைக் காப்பாற்றும் வழியில் முன்னிற்பீர்களென்று நான் எண்ணுகிறேன். மேற்சொல்லிய பித்தோஷ்ண ரோக சம்பவங்களில் ஒன்றாகிய அசாத்யமான நீர் ரோகத்தைப் பரிகரித்துக் கொள்ளவும், கஷாய ஆகார பழக்கத்தைக் கைவிடவும் சிறிது நாளில் நன்கு சுகம் அடையவும் எனது புல்லறிவுக்கு எட்டிய ஓர்விதப் பக்குவத்தை இதனடியில் வரைந்துளேன்.

இஷ்டமும் நம்பிக்கையும் உள்ள கனதனவான்கள் இதனைக் கைகொண்டு சுகமடைவீர்களாக:—

தேற்றான் கொட்டை, நாவல் கொட்டை, ஆவாரம்பூ, கருவேலங்காய் இவை நான்கையும் சம எடையாகப் பதமாய் வறுத்து இடித்து வைத்துக்கொண்டு காலை நேரங்களில் கஷாயம் வைத்துப் பால் சர்க்கரை சேர்த்துச் சாப்பிட்டுவரின் சுகமடையலாமென்பது திண்ணம்.

ஜீ. கண்ணுசாமி பிள்ளை,
ஆயுர்வேத வைத்தியம், திருவாரூர்.

---

## ஆரம்ப ஆசிரியர்களின் நிலைமை.

இம்மண்ணுலகில் சிருட்டிக்கப்பட்ட எல்லா ஜீவராசிகளிலும் மானிடப் பிறவியே சிறந்ததென்பது யாவருமறிந்த விஷயம். இம்மானிடர்க்குக் கல்வியே கண்போன்றதாகும். கல்வியின்றேல் இவர்களும் விலங்கேயாவரென்று நாயனர் கூறினர்.

"அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியின் கைகொடுக்கும் கல்வியினீங் கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை" என்றனர் குமரகுருபர சுவாமிகள்.

"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்" என்றனர் நாயனர்.

இவ்வாறு கல்வி அத்யாவசியமானதென்பதையும், அஃதின்றி இம்மை மறுமைப் பயன்களை அடைய மானிடர் அருகரல்லரென்பதையும் அறிவுடைய ஆன்ஷோர்கள் உணர்ந்து ஒவ்வொருவரும் கல்வி கற்றல் அத்யாவசியமானமென்பதைப் பல நூல்களில் இடித்திடித்துக் கூறியுள்ளார்கள்.

மாந்தர் தம் மக்கள் கல்வி கற்கவேண்டுமென்று ஆவல்கொண்டு கருதி அதற்கென வேற்படுத்தப்பட்டிருக்கும் ஆசிரியர்கள்-உபாத்தியாயர்கள் பால் அவர்களைக்கொண்டு சேர்ப்பிக்கின்றனர். மக்களுக்குக் கல்வி கற்பிக்க முன்வந்துள்ள உபாத்தியாயர்கள், பல அரிய குணங்களை யுடையாராகவே இருக்கவேண்டும். உலகில் மக்களனைவரும் செய்யும் தொழில்களைவிட உயர்வான—பரோபகாரமான—தொழில் இவ்வுபாத்திமைத் தொழிலேயாம்.

முற்காலத்தில் உபாத்தியாயர்களென்றால், அவர்களை மாந்தர்களனைவரும் நன்கு மதித்து அவர்கள் ஜீவனத்திற்கு வேண்டியவற்றைத் தாராளமாக அளித்து வந்தார்கள். இக்காலத்திலோ உலகில் தோன்றிய நவீன நாகரீக மாறுபாடுகளாலோ வேறு எக்காரணத்தாலோ உபாத்தியாயர்கள் மிக்க அலட்சியமாக நடத்தப்படுகிறார்கள். மோக்ஷ சாம்ராஜ்யத்தை மேலெனக்கருதி, பரோபகாரம் ஹிதம் சீர்மென்பதை உன்னி உபாத்திமைத் தொழிலை மேற்கொண்டவர்களுக்கோ, அவர்களின் வயிற்றுப் பிணிக்குத்தக்க வருவாயில்லை. அவர்கள் கால முழுமையும் (நன்மை தீமையை யுணராத) பிள்ளைகளை நல்வழிப்படுத்த அவர்களிடத்தில் சதுர்வித உபாயங்களோடு நடந்து வரவேண்டியவர்களா யிருக்கின்றனர். ஒரு குடும்பத்தில் நான்கு பிள்ளைகளிருந்தால் அப்பிள்ளைகளைத் தக்கபடி நடத்த தாய் தந்தையர்களால் முடிவதில்லை. பிள்ளைகள் அறியாமையாற் செய்யும் குற்றங்களுக்குக் கடுஞ்சீற்றங்கொண்டு சிலர் யாதொன்று மறியாப் பாலகர்களை நையப்புடைக்கின்றனர்.

ஒரு உபாத்தியாயர் வசம் குறைந்தது 20 பிள்ளைகளாவதிருப்பார்கள். இத்தனை பிள்ளைகளையும் வைத்துக்கொண்டு நிர்வகிப்போன் எத்தகைய யோக்கியதைகள் உடையோனுயிருக்கவேண்டுமென்பதைச் சற்று யோசியுங்கள். உபாத்தியாயர்க ளில்லாவிட்டால் தேசம் முன்னேற்றமடையுமா? இராஜ பக்தி பெருகுமா? தேசம் முன்னேற்றமடையுமா?

மேற்கூறியவற்றை வளர்க்கச் செய்பவர்கள் உபாத்தியாயர்களல்லவா? இத்தகைய மூலகாரணங்களுக்கு ஏதுவாயுள்ள உபாத்தியாயர்களுக்கோ வயிற்றுக்குச் சரியான உணவளிப்பதில்லை.

பாடசாலைகளை வைத்துக்கொண்டுள்ள எய்டெட் பாடசாலை மானேஜர்களுக்குப் பிள்ளைகளால் சரியான கூலி கிடைப்பதில்லை. போர்டு, முனிஸிபல் பாடசாலைகளி லிருக்கப்பட்ட உபாத்தியாயர்களுக்குச் சரியான சம்பளம் கிடைப்பதில்லை.

முன் காலத்தில் மாணவர்களால் ஆசிரியர்களுக்குத் தக்க ஊதியங்கள் கிடைத்துக்கொண்டிருந்தன. அக்காலத்தில் குருபக்தி மிகுந்திருந்தது. இக்காலத்திலோ, மருந்திற்குக்கூட அது கிடையாது. இதனுல்தான் தேசம் இத்தகைய நிலைமையை அடைந்ததோ?

இக்காலத்திய ஆசிரியர்களை அடக்கியாள அதிகார வர்க்கத்தினர்கள் ஏற்பட்டார்கள்—மிகுந்தும் விட்டார்கள். "கறப்பது உழக்குப் பால் உதைப்பது பல்லுடைய" என்றபடி அவர்களின் அட்டகாச ஆர்ப்பரிப்பு செப்பத்தரமன்று.

ஆரம்ப ஆசிரியர்களிடத்தில் கற்று உயர்ந்த பதவிகளை வகித்திருப் போருக்கேனும் இரக்க முண்டா? இதைப்பற்றி மேலேயே கூறிவிட் டோமே!

"உண்ட வீட்டுக் கிரண்டகம் நினைக்கும்" காலமாகி விட்டது. தாய் வயிற்றிற்கு இல்லையென ஊரெங்கும் பிச்சைக் கலைய, மகன் மாடி வீட்டிலிருந்து ஏப்பம் விட்டுக்கொண்டு வேடிக்கை பார்க்கும் காலமாகி விட்டது.

சமீப காலத்தில் சம்பளக் கமிட்டியார் ஏதோ ஆசிரியர்கள் மாட்டு இரக்கங்கொண்டு ஆரம்பச் சம்பளம் 30 ரூ. கொடுக்கலாமென சிபார்சு செய்தார்கள். அது "நரி தின்ற கோழிபோல்' ஒழிந்தது போலும். "தண்டு முண்டுக் காரனுக்குத் தயிரும் சோறும், உண்மையாளிக்கு வெந் நீரும் பருக்கையும்" என்றபடி நடக்கிறது காலம். காலமுழுவதும் கத் திக் கத்தி க்ஷய ரோகங்கொண்டு மாள்கின்றவர்களுக்கு வயிற்றுக்கற்றுத் திரிவதுதான் பரிசளிப்பு போலும்.

இவர்களிடத்தில் வந்தணுகியவர்க ளனைவரும் மேலேற இவர்கள் இருந்தபடியிலேயே ஏணியைப்போ லிருக்கிறார்களே. இருக்கப்பட்ட வரைக்கும், பெண்சாதி, பிள்ளை, இல்லாவிட்டாலும் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்றதற் கிணங்க முதுகுரவர்களுக்கேனும் அன்ன மளிக்கவேண்டாமா? இவனுக்கே சரியான உணவில்லையே. இவனெப்படி அன்னை தந்தையர்களுக்கு உணவளிப்பது? ஹே தெய்வமே! கால சுபா வமே! இது எதற்காக இப்படி மாறுகின்றதோ! "ஏழை யழுத கண்ணீர் கூரியவாளோ டொக்கும்" என்கிறார்களே; அந்தோ! யுகதர்மமா? நாகரீக அதர்மமா? கடவுளே யறிவார்.

சில தினங்களுக்குமுன் பாடசாலைகளை வைத்து நிர்வகிக்கும் ஆற்றலை யுடைய ஒரு உத்தியோக சாலையின் தலைவரைக் கண்டு "ஐயா! எம்போ லிய உபாத்தியாயர்களின் வறுமை நீங்க ஏதாவது சம்பளம் உயர்த் துவதுண்டா? பல இலாகாக்களிலும் சம்பளம் உயர்ந்து வருகிறதே" எனக் கேட்டதற்கு, அவர் நகைத்து (அந்நகையானது இழிவாக இருந் தது) 'பேஷ்! இன்னுமா சம்பளத்தை உபாத்தியாயர்களுக்கு உயர்த்து வது! இப்போது கொடுப்பதே 12 ரூ. அதிக மெனக் கூறுகிறார்களே!" என வாய் கூசாது கூறினார். அப்போது என் மனம் பட்ட பாட்டை எழுதப் புகுந்தால் 'ஆனந்தனும்' கோபவந்தனாய் விடுவான்; ஏடும் இடங் கொள்ளாது. வாசகர்களும் சலித்துக்கொள்வீர்களென அஞ்சி விட்டேன். ஆங்கிலங்கற்ற ஆன்றோர்களே! போற்றத்தக்க பட்டங்களைத் தாங்கிய பெரியோர்களே!! தேசாபிமானிகளென விளங்கும் தாதாக்களே!!!

நீங்கள் எப்படி இந்த நிலைமைக்கு வந்தீர்கள்? இதைச் சிறிது யோசி யுங்கள். "டா அனா" வாத்தியாரென மதியீனர்கள் க்ருதும் உபாத்தியாய ர்களின்றியா நீங்கள் உயர்வான கலைகளைக் கற்றுணர்ந்தீர்கள்! உயர்வான பட்டங்களைத் தாங்கித் தூக்க முடியாத திரவியத்தை வாங்குகிறீர்கள்

ஒரு தேசம் முன்னேற்றமடைய அதிலுள்ள மாந்தர்கள் அனைவரும் கல்விமான்களாக இருக்கவேண்டுமெனக் கூறுகின்றார்களே! கல்வி கற்பிக்க முன் வந்துள்ளவர்களுக்குச் சரியான உணவளித்து வைத்துக்கொண்டிருந்தால்தானே மக்களனைவரும் கல்வி பயிலுவார்களென்பதைக் கருதினார்களா? இதுவரை இப்படிக்கூறின மஹானுபாவர் எவரையுங்காணோமே!!

இப்படி உபாத்தியாயர்களைப் புறக்கணித்தால், நீங்கள் நினைக்கிறபடி தேசம் முன்னேற்ற மடையுமா? எக்கண்டத்திலும் உயர்வாக மதிக்கப்படும் ஐரோப்பா கண்ட இங்கிலாந்து தேசத்தினர்கள் இந்தியாவிற்கு வந்து அரசு செலுத்துகின்றனர்களே! இவர்களாவது இதைக் கவனித்தார்களா? வித்யா இலாகாவை அபிவிருத்தி செய்யவேண்டுமென்ற எண்ணங்கொண்டு அதிகாரிகளை வைக்கப் பணத்தை வாரி வாரி இறைக்கிறீர்களே ஒழிய போதகாசிரியர்களுக்குக் கொடுத்துதவிய பாட்டைக் காணோமே,! "சுவரை வைத்துக்கொண்டு தானே சித்திரமெழுதவேண்டு"மென்பதை இந்தியாவிற்கு வந்ததும் மறந்தீர் போலும். உங்கள் நாட்டிலுள்ள ஆசிரியர்களை எப்படி நடத்துகிறீர்கள்! இங்கு இப்படி நடக்க விடுதல் நியாயமா? பிறருக்கு நேரிடும் தீங்கைக் காணச் சகியாத நெஞ்சுடைய நீங்களே இப்படிச் செய்தல் நீதியாமா? இது எங்கள் பாபமா?

புதிய சட்டசபை அங்கத்தினர்களே! வித்யா இலாகா அதிகாரிகளே! மந்திரிமார்களே! ஏழை ஆரம்ப ஆசிரியர் மாட்டு இரக்கங்கொண்டு இவர்களின் வறுமைப் பிணியை நீக்கத்தக்க சம்பளமளித்து இனியேனும் உபாத்தியாயர்கள் பட்டினியின்றி உண்டு உடுக்க வகைதேடுங்கள். தேச சேவைசெய்யும் நமது 'ஆனந்தன்' ஏழை ஆசிரியர்கள் மாட்டு இரக்கங்கொண்டு இத்தகைய வியாசங்களுக்கு இடங்கொடுத் துதவியதாலும், வாசகர்கள் விடயங்களை எடுத்து இவ்விஷயத்திற் சிரத்தைகொண்டு பார்ப்பதாலும் எங்கள் குறைகள் இனியேனும் பலருடைய தூண்டுதலால் நீங்குமெனக் கருதுகிறோம்.

தேசத்தையும்,நாட்டையும் சீர்திருத்த முன்வந்துள்ள தலைவர்கள், காலமுழுமையும் அரைப்பட்டினி கால்பட்டினியுட னிருந்து மடியும் உபாத்தியாயர்கள் மாட்டு இரக்கங்கொண்டு தக்க ஊதியங் கிடைக்கும் வண்ணம் முயற்சி செய்வார்களென்று நம்புகிறோம். எங்கள் வறுமையைப் போக்கிப் பெருமையை நாட்டுங்கள். இதை வெளிக் கொணர்ந்த 'ஆனந்தனுக்கு' ஆசிரியர்கள் ஆசி கூறுவதுபோல், உங்களுக்கு நற்புகழும், நற்கியாதியும் கிடைக்கும்படி பிரார்த்திப்பார்கள்.

"சத்யமேவஜெயதி,"

ஆழ்வார்
'தயானந்த நிலையம்,' சேலம்.

குறிப்பு:—இப்போது கல்வி யபிவிர்த்தியைப்பற்றிய விஷயம் நம்மவரிடமே விடப்பட்டிருப்பதால் சீக்கிரத்தில் அதைச் சார்ந்த மந்திரியார் அத்தியாவசியமாகிய இவ்விஷயத்தில் சிரத்தை யெடுத்துக்கொண்டு, இந்த ஆரம்பக்கல்வி உபாத்தியாயர்களின் குறையை யடியோடொழித்து, அவர்களின் நன்றியறிதலுக்கும் பெரும் புண்ணியத்திற்கும் பாத்திராவாரென்றே பூரணமாக நம்பி ஆண்டவனைப் பிரார்த்திக்கிறோம்.

பத்திரிகாசிரியர்.

# தேகப் பயிற்சி.

## நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்.

இப்பிரபஞ்சத்தில் வசிக்கும் ஒவ்வொரு மனித உருவத்திற்கும் இன்றியமையாதது தேகபலம் ஒன்றே. அது சிலருக்கு இயற்கையிலேயே அமைந்திருக்கும். அவ்வாறு அமைவது எல்லோருக்கும் ஆகாத காரியம். அப்படியானால் இயற்கையிலேயே தேக திடனில்லாதவர்கள் பலமடைவதெங்ஙனம். சிலர், என் சிலர்! பெரும்பான்மையோர் ஔஷதங்களைச் சாப்பிட்டு அகால மரணத்திற்கு ஆளாகின்றனர். வாஸ்தவத்திலேயே அவர்களுக்குப் பலசாலிகளாய்விட எண்ணம். பாபம் ஒரே தடவையில் அதிக பலசாலிகளாய் விடுகிறார்கள். அவர்கள் என் தேகப் பயிற்சி செய்யக்கூடாது? காலையில் எழுந்தவுடன் அனுதினமும் குறைந்த பக்ஷம் 10 நிமிஷங்கள் தேகப் பயிற்சி செய்து வந்தால் தேகம் எவ்வாறு பலமடைகின்றதென்று நன்கறியலாம். இது ஒரு கஷ்டமா? திரவியச் செலவு ஏதாவதுண்டா? இது சாதாரணமாக ஒவ்வொருவரும் செய்யக்கூடியதே.

பள்ளிப் பிள்ளைகளில் பெரும்பான்மையோர் (கிட்டத்தட்ட பூராவும்) தேகப் பயிற்சியை வெறுக்கிறார்கள். நன்கு ஆராயுங்கால் முக்கியமாகக் கற்றவர்களே தேகதிடனில்லாதவர்களா யிருக்கிறார்கள். கற்றவர்களில் முக்கியமாக வக்கீல்கள், குமஸ்தாக்கள் (அதாவது பேசும் வேலையும் எழுத்து வேலையும் உள்ளவர்கள்.) கட்டாயம் தேகப் பயிற்சி செய்தாலொழிய அவர்கள் தங்கள் வாழ்நாட்களை இன்பமாகக் கழிக்க இயலாது.

திரேகப் பயிற்சி செய்வதினால் உண்டாகும் நன்மைகள் பலவுள அவற்றில்,

(1) தேகத்திற்கு நல்ல பலத்தைத் தருகிறதன்றித் தசை நார்களும் வலிமையடைகின்றன.

(2) வியாதி திரேகத்தில் நாடாதபடி செய்கிறது.

(3) மனோமுயற்சிக்கு அனுகூலமாகப் புத்தி தெளிவடையச் செய்கிறது.

(4) தேகத்திற்கு அழகைத் தருகிறது.

(5) தைரியத்தைக் கொடுக்கின்றது.

பந்தாட்டம், குதிரைச் சவாரி, சிலம்ப வித்தை முதலியவைகள் பழகுவதினால் தேகம் உறுதியடைகிறது. இவைகளைச் செய்யச் சாத்தியப்படாதவர்கள் ஸாண்டோவின் ஸ்ப்ரிங் டம்பல்ஸ் (Sandows Spring Dumbbells) டெவலபர் (Sandows Developer) கரிலா முட்டிகள் (Indian Clubs) தண்டால் பஸ்கி முதலியவைகளை வீடுகளிலேயே செய்து கொள்ளலாம். இவைகளி லெல்லாம் செய்யவேண்டிய தவசியமில்லை. ஏதாவதொன்றை உபயோகித்தால் போதும்.

ஆதலால் சகோதரர்களே! காலையில் எழுந்தவுடன் பத்து நிமிஷங்களாவது தேகப் பயிற்சியில் செலவழித்து வருவதை ஒரு கடமையாகக் கொண்டு அநுதினமும் செய்து வாழ்நாளை விருத்திசெய்ய எங்கும் நிறைந்த சச்சிதானந்த பரம்பொருள் அருள் புரிவாராக. (தொடரும்.)

எஸ். எம். நேஞ்சப்பன்,
கோயம்புத்தூர்.

குறிப்பு:—இதை வாசித்து மறந்து விடுவதில் ஒரு பயனுமில்லை. இது அனுபவத்தில் தவறாமல் பெரும்பலனை யளிக்கத்தக்கவிஷயம். பெற்றோர்கள் தம்மக்கள் இதை யனுசரித்து நடக்கும்படிச் செய்யவேண்டும். இவ்வாறொழுகினாலன்றி பத்திரிகைகள் சஞ்சிகைகளா லடையத்தக்க பயன்களை நாம் அடையமாட்டோ மென்பதுண்மை. வெல்லம் என்று எழுதி வாசித்தால் நாவில் மதுரம் தோன்றுமோ? சோறு என்றதாலேயே பசியடங்கி விடுமோ? பத்திரிகாசிரியர்.

---

## கைவல்ய நவநீத வசனம்

(314-வது பக்கத் தொடர்ச்சி)

(ஞானிக்கு விதேக கைவல்யமட்டும் விவகாரம் தொடரும் என்றதனால் சீடன் பின்னுமொரு ஐயம் உண்டானதைப் பற்றி வினாதல்.)

சீடன்:—சுவாமிகளே! ஞானிக்கு விதேக கைவல்யமட்டும் விவகாரமுளதென் றருளினீர்களே, கண்ணால் காணப்படும் நாமரூபமுடைய எல்லா வஸ்துக்களும் அசத்தியம் எனினும், அவற்றைப்பற்றிய விவகாரங்களில் சம்பந்தித்தல் துன்பமல்லவோ? இரண்டற்ற அகண்டாகார அனுபவத்தா லுண்டாகும் பிரம்மானந்தம் அப்போ துளதாகுமோ? விவகாரங்களொழிந்தாலல்லவா ஆனந்தானுபவம்உளதாகும்? அது உண்டாதற்கு நிருவிகற்ப சமாதி கூடவேண்டு மல்லவா? அவ்வாறு ததாகாரத்தை யடைவதற்காக நிஷ்டை புரிந்தால் அவன் செயலற்றவன் என்று எப்படி கூறுவதோ அறிகிலேன்.

[ஒருவிடத்தில் அமர்ந்து தேகச் சேட்டையை நிறுத்தி மனதை யொடுக்கி நிஷ்டை பழகுவதும் ஒரு தொழில்தானே? அப்படி யிருக்கத் தொழிலற்றவ னென்று எப்படி கூறுவது? என்பதாம்.]

ஆசான்:—அறிவுள்ள மைந்தனே! பிராரப்த கன்மம் ஒழியுமட்டும் விவகாரம் இருந்தே தீரும். பிரம்மானந்த மடைவதற்காகத் தியானம் சமாதி முதலிய செய்தலும், வெளி விவகாரங்களும் அந்தக்கரணத்தால் செய்யும் தொழில்களல்லவா? துரிய அனுபவமாகிய சாக்ஷாத்காரநிலையை யடைந்தவர்கள் செய்யவேண்டிய வேலை வேறே யேதேனு முண்டோ? ஒன்றுமில்லை. அப்படிச் சமாதிகளைப் பழகுவானாயின் அவன் ஆரூடனன்றாம்.

[சமாதி இருவகையாகும். 1, சவிகற்பசமாதி. 2, நிருவிகற்பசமாதி:-

1. சவிகற்ப சமாதி:—விகற்பம் என்பதற்கு - பேதம், வேறுபாடு என்று பொருள். சவிகற்பசமாதி என்றால் கொஞ்சம் வேறுபாடுள்ள சமாதி என்று பொருள்படும். ஆன்மாவை யணுவுக் கணுவாய்த் தரிசித்தல் சவிகற்ப சமாதி; இதில் ஞாதுரு, ஞானம், ஞேயம் என்ற திரிபுடிபேதங்களுண்டு.

2. நிருவிகற்ப சமாதி:—இதற்கு பேதமற்ற சமாதி என்பது பொருள். இது திரிபுடியொழிந்து தான் அதுவாய்த் தற்போதமற்று அகண்டமான சாக்ஷாத்கார நிலையை யடைவதாம்.

“ தானான தன்மயமே யல்லா லொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போனாலுங் கற்பூர தீபம் போலும்
போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றாம்
ஞானாகா ரத்தினொடு ஞேய மற்ற
ஞாதுருவு நழுவாம னழுவி நிற்கும்
ஆனாலு மிதன்பெருமை யெவர்க்கார் சொல்வா
ரதுவானா லதுவாவ ரதுவே சொல்லும்”

(தாயுமானவர்)

இப்போது கூறியவற்றால் சவிகற்ப சமாதியே முதலில் அப்பியசிக்கப் படுவதென்றும், நிருவிகற்ப சமாதியே அடையும் பலன் என்றும் நன்கு விளங்கும்.

இவையிரண்டன்றி சகச சமாதி என்பதும் ஒன்றுண்டு; நிருவிகற்ப சமாதியின் அனுபவத்தோடு, கனவுபோல் போஜனாதி விவகாரங்களைச் செய்துகொண்டு சதா நிஷ்டையி லிருக்கும் துறவிகளின் நிலைமையே சகச சமாதி எனப்படும். அத்தகைய ஆரூடர் விவகாரங்களைச் செய்யினும் அவை கர்த்தவ்யமன்றாம் ஏனெனில், அவர்களது ஆன்ம திருஷ்டியில் விவகாரத்தோடு கூடிய சம்பந்த மின்றாம். விவகாரம் அவர்கள் ஞான அனுபவத்திற்கு விரோதியன்றாம்; ஞானமும் அவர்கள் விவகாரத்திற்கு விரோதியன்றாம்.]

(சீடனுக் குண்டாகக்கூடிய சந்தேகத்தைத் தாமேயெடுத்துக்காட்டி குரு பின்னும் கூறுகிறார்.)

௫௩:—“ ஆரூட தசையடைந்து திருசிய திருஷ்டியொழிந்து சதா நிஷ்டையி லிருப்போரிலும் சிலர் சித்த சலனத்தை யடக்குதற் குரிய தியானாதிகளைச் செய்கிறார்களே, அஃதேன் என்று கேட்பாயாயின் கூறுதும்; இவ்வுலகில் அவரவரைப் பற்றி யிருக்கும் பிராரப்தத்தின் பலன் எப்படியோ, அவ்வாறே ஜீவன் முத்தரும் பலவிதமான விவகாரங்களை யுடையவர்களாக இருப்பார்களென்று முன்னமே கூறியுள்ளோ மல்லவா” என்றருளினார்.

[முந்திய படலத்தில் ஜீவன் முத்தரும் பிராரப்தத்தை யனுபவித்தே தீரவேண்டு மாதலின் அவர்களுக்கு அவரவர் பிராரப்தப்பலன்படி விவகாரங்கள் பலவிதமாக விருக்கும் என்று இந்நூலாசிரியரே கூறியுள்ள கீழ்க்கண்ட விஷயம் ஈண்டு கவனிக்கத்தக்கது:—

“ பேதகர் மத்தால் வந்த பிராரப்த நானா வாகும்
ஆதலால் விவகா ரங்க ளவரவர்க் கான வாகும்
மாதவம் செயினுஞ் செய்வார் வாணிபஞ் செயினுஞ் செய்வர்
பூதலம் புரப்பா ரையம் புகுந்துண்பார் ஜீவன் முத்தர்”

ஆரூடதசை யடையுமுன்பு தியான நிஷ்டாதிகளில் அப்பியாசிப்பவனே கிருத கிருத்தியனன்றாம் அதாவது கிரியையற்றவ னல்லவென்பதாம்]

## ஆரூடர் விவகாரம் உலகோபகாரம் என்று ஆசான் கூறுகிறார்.

“ மைந்தனே ! ஞானிகளின் விவகாரங்க ளனைத்து உலகோபகாரத்தைக் கருதியேயன்றி, அவற்றால் ஒரு பலனையடைய இச்சித்துச் செய்வ

தல்ல. அவ்விவகாரங்களால் அவர்களுக்கெவ்விதத் துன்பமுமில்லை. எது போலெனில், சிருஷ்டித்திதி சங்காரம் முதலிய அனேக விவகாரங்களைச் செய்யும் ஈசுவரன் அவற்றால் எவ்விதப் பாபபுண்ணியப் பலன்களையு மடையாததுபோல.

[ஞானி உலகோபகாரமாகப் பிறர்க்கு ஞானபோதனை செய்தல், பிராரப்தத்தை யொழிக்குமட்டும் இருக்கும் தேகபோஷணையி னிமித்தம் உண்டாகும் பசிப்பிணியை யொழிக்க அன்னபானாதி யருந்தல் முதலிய விவகாரங்களைச் செய்யினும், அவனுடைய அந்தர்த்திருட்டியில் தான் எத்தொழிலைச் செய்வதாகவும் பாவனையில்லை. அவன் மனம் சத்துவ குணமாத்திரமாய்ச் சேடித்து எதிலும் தாக்கற்று நிற்றலின் அந்த விவகாரங்களால் அவனுக்கு எவ்விதக் கர்மமும் உண்டாவதின்றாம்.]

சீடன்:—சுவாமி! ஞானியை யீசனுக்கு ஒப்பென்று கூறினீர்களே, அவன் எப்படி யொப்பாவான்?

ஆசான்:—எப்படி யெனில், ஈசனும் ஞானியும் மாயை அவித்தைகளிலும் அவைகளின் காரியங்களிலும் மமதையும், அகந்தாபிமானமும் விட்டிருப்பதால் ஒப்பாவ ர்கள். இந்த ஞானி ஈசனுமாவன், பல ஜீவர்களுமாவன் உலகனைத்தும் தானாகவும் ஆவன்.

[ஞானி பிரம்மான்ம ஐக்கியமாகிய இரண்டற்ற அகண்டாகார நிலையில் ததாகாரமாயிருப்பவனாதலால், ஈசுவரனைப் போலவே இந்த அண்டரண்ட சராசரங்கள் யாவும் அவனே ஆவன் என்றபடி]

சீடன்:—"அடியேனது சந்தேகங்களனைத்தும் களைந்தொழிக்கும் பரமாசாரியரே! இந்த ஞானியே இப்பிரபஞ்சத்திலுள்ள எல்லாச் சீவன்களுமாக விருந்தால், இவன் மோக்ஷமடைந்தால் மற்றச் சீவர்கள் அனைவரும் முத்தி பெறாமலிருக்கிறார்களே, அதேனோ? எல்லாச் சீவன்களும் தனித்தனி வெவ்வேறு சீவன்களாயின் இவன் எப்படி எல்லாச் சீவான்களுமாவான்? எல்லா ஐயங்களையும் ஒழித்தருளியது போல் இதையும் ஒழிக்கப் பிரார்த்திக்கிறேன்" என்று விண்ணப்பித்துக் கொண்டான்.

ஆசான்:—அறிவுள்ள மகனே! எல்லாச் சீவன்களும் தானேயாக விருக்கும் ஞானி முத்தியடையின் மற்ற சீவர்களும் என் அடையவில்லை? என்று நீ வினவிய சந்தேகத்திற்குத் திருட்டாந்த பூர்வகமாக விடையளிக்கிறோம், கேட்பாயாக:—

உலக முழுதும் பிரகாசித்துக்கொண் டிருக்கும் சந்திரன் ஒன்றே. ஆனால் பூமியில் பல ஏரிகள், குளங்கள், குட்டைகள், சட்டிகள் முதலியவை அனேக மிருக்கின்றன. ஆதலின் இவற்றிலுள்ள நீர் நிலைகளில் தோன்றும் ஆபாச சந்திரர்கள் (பிரதிபிம்பச் சந்திரர்கள்) அனேகமுண்டு. இதைப்போலவே எண்ணிறந்த சரீரங்களில் எண்ணிறந்த அந்தக்கரணங்களுள. அதனால் அதிஷ்டானமாகிய பிரம்மம் ஒன்றேயாயினும் அந்தக்கரணங்களில் பிரதிபலித்த அதன் சாயல்களாகிய சீவர்கள் எண்ணிறந்தோரா யுளர்.

திருட்டாந்தத்தில் ஒரு சட்டி யுடைந்தால் அதிலிருந்த நீரில் தோன்றியிருந்த பிரதிபிம்பமாகிய ஆபாச சந்திரன் மட்டுமே அதிஷ்டான

சந்திரனோடு கலந்துவிடு மன்னியில், மற்ற நீர் நிலைகளிலுள்ள ஆபாச சந்திரர்கள் அப்படியேதா னிருப்பார்கள். அதுபோலவே, அந்தக்கரணத்திலுள்ள அஞ்ஞானமாகிய பந்தம் நீங்கி ஞானமடைந்த சீவன் மட்டும் அதிஷ்டானமாகிய பிரம்மத்தில் அயிக்கியமடைவான். அஞ்ஞானம் நீங்காத மற்ற ஜீவன்கள் முத்தியடைய மாட்டா.

[மூலப் பிரகிருதியின் இரஜோ குணத்திற்கு அவித்தை அல்லது அசுத்தமாயை யென்றும், சீவகாரண சரீர மென்றும் பெயர் என்றும், அதில் பிரதிபலித்த பிரம்மச் சாயையே ஜீவன் என்றும் முன் படலத்தில் தத்துவ உற்பத்தி கூறிய விடத்தில் கூறியிருக்கிறோம். சுழுத்தியின் கண்ணுள்ள அந்த அவித்தையையே சாக்கிரத்தில் மனம் என்கிற அந்தக்கரணமாகப் பரிணமிக்கிறது. ஆகையால், அனுபவத்தில் அந்தக்கரணமே அவித்தை யல்லது மாயையாகும்.

"மனமன மெங்குண்டு மாயையு மங்குண்டு
மனமாயை யன்றி மற்றொன்று மில்லை
பினையாய வேண்டாம் பிதற்றவும் வேண்டாந்
தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே." (பாடுதுறை.)

என்ற ஆன்றோர் வாக்கே இதற்குச் சான்றாம்.

மேலே கூறப்பட்ட திருட்டாந்தத்தில், கடம் தேகமாகும்; அதிலுள்ள ஜலம் அந்தக்கரணம்; வானசந்திரன் அதிஷ்டானமாகிய பரப்பிரம்மம்; ஜலத்தில் தோன்றும் ஆபாச சந்திரனே சீவன். ஜலம் அசைந்தால் பிரபலித்த ஆபாசமாகிய ஜலசந்திரன் அசைவதுபோல் அதில் தோன்றுகிறது. அதுபோலவே அவித்தையின் வயப்பட்ட ஜீவன், அந்தக்கரண சலனத்தைத் தன் சலனமாக மயங்கிக் கருதுகிறான். ஞானமாகிய அக்கினியால் அவித்தையின் காரியமாகிய அந்தக்கரணம் என்ற நீர் தீய்ந்துபோனால், ஆபாச சந்திரனாகிய சீவபாவம் ஒழிந்து கூடஸ்தனாகிறான். பிராரப்தம் முடிந்ததும் கடமாகிய தேகம் வீழ்ந்துபோம். அப்போது ஆன்மா பரமான்மாவில் அயிக்கியமடையும்.

நான் என்பதற்று அகண்டாகார நிலையிலிருக்கும் ஞானி எல்லாச் சீவன்களும் யாவும் தானாகவேயுள்ள அனுபவத்தி லிருக்கிறா னெனினும், எந்த அந்தக்கரணத்தில் ஞானம் உண்டாகிறதோ அந்த அந்தக்கரணத்தில் மட்டுமுள்ள அவித்தையின் கூறு (அஞ்ஞானம்) நாசமாம். அதாவது ஞானம் உதிக்கும். ஆகையால் அவன் மட்டும் ஜீவன் முத்தனாவான். மற்றையருடைய அந்தக் கரணங்களி லுள்ள அஞ்ஞானம் நீங்காததால் அந்தச் சீவன்கள் முத்திபெறா. சச்சிதானந்தப் பிரம்மமே ஜகஜீவ பரங்களாக விளங்குவதால் பிரம்ம சாக்ஷாத்கார மடைந்த ஞானி எல்லாம் தானாகவே விளங்குகிறான் என்றருளினர்.]

(சீடன் இன்னும் ஒரு ஐயம் வினவல்)

சீடன்:—பரமாசாரியரே! ஞானி பிரம்ம விஷ்ணு சிவன் இவர்களோடெப்படி யொப்பாவான்? அம்மூவரும் சிருஷ்டித் திதி சங்காரங்களைச் செய்கிறார்கள். அவர்கள் பிறர் மனதிலுள்ள விஷயங்களையும் முக்காலங்களில் நடக்கும் விஷயங்களையும் உணர்வார்கள். ஆதலின் அவர்கள் யாவற்றிலும் சம்பந்தித்தவராவர். அந்த விசேஷ மகிமை

களில் ஞானியிடம் ஒரு சிறிதும் காணோமே. அப்படியிருக்க இவன் எப்படி அவர்களோ டொப்பாவான்?

குரு:—மைந்தனே! ஞானிக்கும் அவர்களுக்கு முள்ளபேதம் ஒரு சிறு தீபத்திற்கும் பெரிய தீவடிக்கும், அல்லது தடாக நீருக்கும், குடசலத்திற்கும் உள்ளபேதம் போன்றதாகும். அதாவது ஒரு பெரிய தீவட்டி அனேகம் பேர் கூடிய ஒரு பெருஞ் சபைக்கு வெளிச்சமளிக்கும். சிறு தீபமோ ஒரு சிறு அறையிலுள்ள ஐந்தாறு பேருக்கு மட்டுமே வெளிச்ச மளிக்கும். ஆயினும் இரண்டும் பிரகாசத்தையளிக்கும் ஒரேவித குணமுடைய அக்னிச் சுடரே.

ஒரு குடஜலம் ஒரு குடும்பத்திலுள்ள ஜனங்களின் தாகத்தை மட்டும் தணிக்கும். ஓர் தடாகத்திலுள்ள நீரோ ஓர் ஊரிலுள்ள ஜனங்களெல்லாருடைய தாகத்தையும் தீர்க்கும். ஆயினும் இரண்டும் தாகத்தைத் தணிக்கும் ஒரே குணமுடைய ஜலமே.

இவ்வாறே ஈசனும் ஞானியும் (பிரம்ம நிலையாகிய) ஞானத்தால் பேதமுடையவரல்லர். சீவர்கள் முத்தியடையா வண்ணம் தடுத்த ஆவரண மென்னும் மாயையால் மட்டுமே (சத்துவம் இராஜசு என்ற) பேதமாம். மேலும்,

மானிடரில், துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் செய்யும் அரசனைப் போலவும், சாபானுக்கிரக வல்லபமுடைய சித்தராதியரைப் போலவும், பிரம்மா, விஷ்ணு முதலிய தேவர்கள் மாயா வல்லபமுடையவர்கள்; அணிமாதி அஷ்டமா சித்திகள் கைவந்த மாதவமிகுத்தோர். மானிட ஜன்மமாகிய ஞானிக்கு மாயா வல்லபமும், அஷ்டமா சித்திகளும் இல்லையாதலின் அவர்களை விடத் தாழ்ச்சியுடையவனாகக் காணப்படினும், பிரம்ம பாவனையால் உயர்வு தாழ்வென்ற பேதமே யில்லை. (மேலே கூறிய குடநீர், தடாகநீர், இவற்றிலும், திரிதீவட்டியிலும், தாகத்தைத் தணிப்பதும், வெளிச்ச மளிப்பதுமாகிய தொழிலில் சற்றும் பேதமில்லை. ஆனால் அளவில் மட்டும் பேதம். அதுபோலவே ஞானியும், ஈசனும் ஞானத்தில் பேதமுடையவரல்லர். மாயை யளவில் பேதப்பட்டவர். (தொடரும்.)

சீடன்.

---

## இல்லறம்—விக்கிரகாராதனை

(301-ம் பக்கத் தொடர்ச்சி)

இந்த விக்கிரகத்துக்குப் பிராணப் பிரதிஷ்டை செய்வதற்கென்று ஓர் அந்தணன் நியமிக்கப்பட்டிருப்பன். அவன் இதற்கென்றே கையிற் கங்கணங்கட்டிக்கொண்டு விரதத்திலிருப்பன். எந்தத் தெய்வம்பிரதிஷ்டை செய்யப்படுகின்றதோ அந்தத் தெய்வத்தின் மந்திரத்தைச் சிந்தித்துக் கொண்டேயிருப்பன். பட்டு கம்பளி முதலிய உடைகளைத் தரித்துக்கொண்டும், பலவகையான இரத்தினமாலைகளைக் கழுத்தில் அணிந்து கொண்டும், தத்தம் மதத்துக்குரிய விபூதியையும் திருநாமங்களையும் தரித்துக்கொண்டுமிருப்பன். பற்பல முத்திரைகளால் தன் சரீர சக்தியைச் சமப்படுத்திக் கொண்டுமிருப்பன். அவன் குறிப்பிட்ட சுப முகூர்த்தத்தில் எங்கும் நிறைந்த பரம்பொருளின் சர்வ வியாபக சக்தியை மனதிற் பாவித்துக்கொண்டு

தெய்வ மந்திரோச்சாரணத்தினுல் அந்த விக்கிரத்துக்குப் பிராணப்பிரதிஷ்டை செய்வன். இப்படிச் செய்வதனுல் பூதசக்தி, லோகசக்தி, ஜீவசக்தி மானிடசக்தியாகிய இவைகள் அந்த விக்கிரகத்தில் சேர்க்கப்படும். அதனுல் பிராண சக்தியுண்டாம். அதன் பின் பூஜை செய்வார்கள். இவ்விதமாகச் செய்யப்படும் சொரூபமே விக்கிரகம் என்னப்படும். அவ்விக்கிரகத்தில் எங்கும் நிறைந்த பரம்பொருள் சாந்நித்தியமாயிருக்கும். இதையே தெய்வமென்று நமது பெரியோர்கள் வணங்கி வந்தார்கள். பரம்பொருள் எங்கும் நிறைந்திருந்தாலும் ஜீவ சக்தியுண்டாக்கப்பட்ட பிம்பத்தில் அதிகமாகப் பிரகாசிக்கும். அதைத் தரிசித்து வணங்குகிறவர்களுக்குப் பரம்பொருள் அந்தச் சொரூபமாகவே காட்சியளிக்கும். அதைத் தரிசிப்பதினுல் அதன் சக்தி நமது நோக்கத்தின் வழியே நமது சரீரத்தில் வந்து சேரும். அப்போது நமது சரீரம் நிர்மலமாகும். இதயம் சுத்தியாம். அவ்விதயத்தில் அந்த விக்கிரக சொரூபம் நிலைபெறும். அதை மறவாமல் தியானிக்க அதுவே திவ்ய சொரூபமாகக் காட்சிதரும். இவ்விதமாகப் பிராண சக்தி உண்டாக்கப்பட்டுத் தெய்வ சான்னித்திய முள்ள விக்கிரகமே ஆலயங்களில் விளங்குவது. இதனை எல்லாரும் தரிசிக்கலாம். இதற்கு ஞானி அஞ்ஞானியென்னும் வேறு பாடில்லை. இவ்வாறு இதைத் தரிசிப்பவர்கள் இதில் அமைந்திருக்கும் சக்தியை நோக்கத்தால் கிரகித்துக்கொள்வார்கள். இதனுல் நாடோறும் இதன் சக்தி குறைந்து கெடுமே யெனின், அவ்வாறு கெடாதவாறு அதைப் பூர்த்தி செய்விக்கும் உபாயமாகவே பூஜை நியமிக்கப்பட்டுள்ளது.

அதற்காகவே அது பால், நெய், தேன், முதலியவற்றுல் அபிஷேகம் செய்யப்படும். பில்வம், துளசி பலவகை மலர்கள் முதலியவற்றுல் அர்ச்சகர்கள் அதை அர்ச்சிப்பார்கள். சொர்ணுபரணம் இரத்தினுபரணம், முதலியவற்றுலும் பலவகை மலர்களாலும் அலங்கரிப்பார்கள். பட்டுகளை ஆடையாக உடுத்துவார்கள். நூல்வஸ்திரமும் உபயோகிக்கப்படுகின்ற தென்றுலும் பட்டாடையே சிறந்தது. பருத்தி நூலைப் பித்தளை முதலிய தட்டுகளி லிட்டு நெய் வார்த்துக் கொளுத்திப் பிரதட்சணமாகவும் பிரணவ சம்பிரதாயமாயும் ஆராத்தி செய்கின்றுர்கள். சாம்பிராணி, கற்பூரம் முதலியவற்றின் புகையையும் சேர்க்கின்றுர்கள். ஐசுவரியத்துக்குத் தக்கபடி ஒரு நாளைக்கு எட்டுவேளை, ஆறுகாலம், நாலுகாலம், மூன்றுகாலம், இரண்டுகாலம் பூஜை செய்கிறுர்கள். இந்தப் பூஜைகளால் விக்கிரகசக்தி குறையாமற் காக்கப்படுகின்றது. பிராணப்பிரதிஷ்டை செய்தபோது அவ்விக்கிரகத்தினிடம் சேர்ந்த ஜீவசக்தி குறையாமலிருக்கும் பொருட்டே பாசுகம், ஔஷதம், லௌகீகம் என்னப்படும் மூவகைச் சக்திகளும் தினந்தோறும் சேர்க்கப்படுகின்றன. பிராணப் பிரதிஷ்டை செய்யும்போதே விக்கிரகத்தின் கீழே ஏராளமான இரத்தினம் சொர்ணம் முதலியன இட்டுவைக்கப்படுகின்றன. தினந்தோறும் சொர்ணமாலை இரத்தினமாலைகள் சாத்தப்படுவதினுலும் லௌகீக சக்தி விர்த்தியாகும், அபிஷேகத்தினுல் அப்புவின் சக்தி சேர்க்கப்படுகின்றது. அலங்காரதீபம், தீபம், தூபம், கற்பூராத்தி முதலியவற்றுல் தேயுவின் சக்தி கூட்டப்படுகின்றது. இவ்வாறு பஞ்சபூத சக்திகளும் ஜீவசக்தியும் தினந்தோறும் சேர்க்கப்படுவதினுல் விக்கிரகம் ஜீவசக்தியுள்ளதாகவே விளங்கும். ஆதலால் சாதாரண பிரதிமைகளுக்கும் ஆராதிக்கப்

படும் விக்கிரகத்துக்கும் வெகு பேதமுண்டு. முற்கூறிய மூவகைச்சக்திகளும், பூதசக்திகளும் எவ்விடத்தில் நிறைந்திருக்கின்றனவோ அந்த விடத்தில் சர்வவியாபகப் பரம்பொருள் அதிகமாகப் பிரகாசித்துக்கொண் டிருக்கும் ஜீவசக்தி ஸம்ஸ்காரத்திலன்றி யியற்கையி லமைந்திருக்கும் மானிடரிடம் தெய்வப் பிரகாசம் அதிகமாக விளங்கும். இந்தக் கருத்தினாலேதான் குருவைத் தெய்வ சொரூபமாக பாவித்து வணங்குதலும், மாதா பிதாக்களைத் தெய்வமாகக் கொண்டு ஆராதித்தலும், பெண்கள் தங்கள் கணவனையே தெய்வமாகக் கொண்டு வழிபடுதலும் விதிக்கப்பட்டன. ஏனைய மதஸ்தர்களிலும் சிலர் குருவை வணங்குவதும் காணலாம். நிற்க, ஸம்ஸ்காரத்தினால் தெய்வீக சக்தி அமையப்பெற்ற விக்கிரகத்தை வணங்குவது தெய்வத்தை வணங்குதலே யன்றி வேறல்ல. இவ்வுண்மையை யுணர்ந்த சைவ வைணவப் பெரியோர்களும் விக்கிரகாராதனை செய்து பெறும்பேறு பெற்றார்கள். இப்பொழுது யாம் கூறியது பூஜைக்குரியதாய் ஆலயங்களில் விளங்கும் விக்கிரகங்களையே. ஆத்மார்த்தமாகச் செய்யப்படுவதும், கிருகத்துக்குள்ளேயே ஆராதிக்கப்படுவதுமாகிய விக்கிரகங்களுக்கு அதிக பூஜை வேண்டுவதில்லை. ஏனெனில், அவ்விடத்தில் அதைத் தரிசிப்பார் அதிக மில்லாமையால் அதன் சக்தி குறையாது. நித்திய பூஜையில்லாத கோவில்களில் தெய்வீக மகிமை குறையும். அவ்வகைப்பட்ட ஆலயங்களில் ஆரியர்கள் தெய்வ வழிபாடு செய்வதில்லை. எந்த இடத்தில் நித்திய பூஜை நடக்கின்றதோ, எந்த இடத்தில் சதா தீபம் எரிந்துகொண்டிருக்கிறதோ அந்த ஆலயத்திலேயே ஆரியர்கள் கடவுள் வழிபாடு செய்கிறார்கள். அதனாலே பெரிய பக்திகளையும் பெறுகின்றார்கள். சாதாரணமான சொர்ணம் இரத்தினங்களை யணிவதினாலே மனிதர் பெரிய சக்தியை யடைவார்களென்று முன் ஒரு சந்தர்ப்பத்தில் பதார்த்தகுண முறைப்படி பிரமாணங்களால் நிரூபித்திருக்கின்றோம். அப்படியானால் ஸம்ஸ்கார மூலமாக அதிக சக்தி யமையப்பெற்ற லோக விக்கிரகங்களில் மஹா சக்தி விளங்கு மென்பது கூறவேண்டுவதில்லை. இதை முன்னிட்டே புண்ணிய காலங்களில் தேவாலய தரிசனம் விதிக்கப்பட்டது.

நித்தியோத்ஸவ மாதோற்சவ மகோற்சவ காலங்களில் விக்கிரகங்கள் வெளியிற் கொண்டு வரப்படும். அக்காலத்தில் அநேக ஜனங்கள் கூடித் தரிசிப்பதினால் விக்கிரகத்துக்குச் சக்தி குறையும். அதைப்பூர்த்தி செய்து கொள்வதற்காகவே அக்கினி காரியங்களும் அபிஷேகாதிகளும் செய்யப்படும். பிரதிஷ்டா காலத்திற் செய்யப்பட்டது போலவே விசேஷமாகச் செய்யப்படும். பெரிதான சில தேவாலயங்களில் நடக்கும் உற்சவங்களில் அநேக ஜனங்கள் கூடுவதனால் அத்தினம் விசேஷ ஹோமாதிகள் செய்யப்படும். இரதோற்சவ காலத்தில் வருணாசிரம பேதமில்லாமல் பல ஜனங்களுங்கூடி இரதத்தை யிழுப்பார்கள். அதனால் விக்கிரகம் அசுத்தப்பட்டுச் சிறிது சக்தி குறையும். அதைப்பூர்த்தி செய்வதற்காகச் சண்டாள அபிஷேக மென்று ஒரு பெருங்கிரியையும் செய்யப்படும். இதனால் விக்கிரகத்தில் எப்போதும் தெய்வ வியாபகம் நிறைந்திருக்கும். அதைத் தரிசித்து வணங்குவதனால் பெரும்பய னுண்டாகு மென்பதில் ஐயமேயில்லை.

கண்காணாததை மனது சிந்தியா தென்பது நிச்சயமாதலால், தெய்வ தியானத்துக்கு விக்கிரக தரிசனம் மிக அவசியமேயாம். தியான

சமாதி முதலியவற்றாலும் சத்தியம்முதலிய குணங்களாலும், ஸ்நானாதிகளி னாலும் சுத்தி பெறாமலிருக்கும், சரீரத்திலுள்ள மனமென்னுங் கருவியும் அசுத்தமாய்ப் பிரகாசமற்றேயிருக்கும். மலினமான மனதினால் தேஜோ மயானந்த திவ்ய சொரூபத்தைச் சிந்திப்பது கூடாத காரியம். ஒரு கால் மனம் சிந்தித்தாலும் ஏனைச் சரீரம் பயனடையாது. ஏனெனில், மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரணங்களாலுமே கர்மங்கள் செய்யப் படுகின்றன. திரிகரணங்களும் சுத்தமாய்ப் பயன் பெறுவதற்கு விக்கிரகா ராதனையைத் தவிர வேறு மார்க்கமில்லை. (தொடரும்.)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## பெண்களுக்கு அவசியமான சில புத்திமதிகள்.

ஜப்பான் தேசத்தில் பெண்களுக்குக் கலியாணம் நடக்கும் காலங் களில் தாயார் பெண்ணுக்குக் கீழ்க்கண்ட தசோபதேசங்களைக் கூறுவது பூர்வ காலமுதல் வழக்கமாம்:—

1-வது.—விவாகம் முடிந்த விநாடிமுதல் நீயென் புத்திரியல்ல. உன் மாமியாரே யுன் தாய்; உன் மாமனாரே யுன் தந்தை. இதுவரையில் எனக் கும் உன் தந்தைக்கும் கீழ்ப்படிந்து நடந்துவந்ததுபோல், இனி நீ யுன் மாமனார் மாமியாருக்குக் கீழ்ப்படிந்து நடந்துகொள். உன் மாமியாரைத் தாய்போல் கருதி அவளிடம் பட்சம் காட்டி நடந்துகொள்ள மறவாதே.

2-வது.—பெண்ணின் மேலான ஆபரணம் புருஷன் சொல் மீறாமை யேயாகும். உன் புருஷன் உன் தலைவன்; அவனிடம் மரியாதையோடும் பக்தியோடும் நடந்துகொள்ள வேண்டும்.

3-வது.—எப்போதும் பெருமை பாராட்டிக் கொள்ளாதே; அப்படிச் செய்தால் உன் கணவன் உன்னை வெறுப்பான்.

4-வது.—கணவனுக்கு முன் கடுஞ்சொல் கூறாதே. 'பெண்டிர்க்கழ கெதிர் பேசாதிருத்தல்' பொறுமையைக் கைவிடாதே. 'பொறுத்தார் பூமி யாள்வர்' தக்க சமயம் வாய்க்கும்போது சொல்ல வேண்டியதைப் பட்சத் தோடு சொல்.

5-வது.—பேச்சுக்காரி என்று பேரெடாதே. அதிகம் பேசுகிறவள் அரைக்காசுக் குதவமாட்டாள். பேச்சு அதிகமானால், பொய் புறணி யதிக மாகும். பேசாதிருந்தால் பிழை யொன்றுமில்லை.

6-வது.—குறி கேட்கும் வழக்கத்தை யடியோடு விட்டுவிடு. சகுண சாத்திரம் பார்க்கும் பெண் தானே தனக்குச் சத்துரு.

7-வது.—வீட்டுக் காரியங்களை விவேகத்தோடு நடத்து. வரவுக்குத் தகுந்த செலவு செய்.

8-வது.—நீ செல்வவந்தன் புத்திரியாக விருந்தால் அகங்காரம் கொள் ளாதே. உன் ஆஸ்தியைப் பற்றி பிறர் கேட்கப் பேசாதே. தற்புகழ்ச்சி செய்துகொள்ளாதே. உன் கணவனுடைய சுற்றத்தாரை யிகழாதே.

9-வது.—வலியவந்திடினும் வாலிபர் சினேகம் வேண்டாம்.

10-வது.—பலவர்ண உடையுடுத்தாதே. எப்போதும் சுத்தமான ஆடை யணிந்துகொள்.

குறிப்பு:—இப்பத்து புத்திமதிகளும் நமது மாதர் பெண்கள் அனைவரும் அவசியம் கைக்கொள்ளத் தக்கவைகள். பெற்றோர்கள் தம் பெண்களுக்கு இதைப்போதிக்கவேண்டும்.

---

## "விதவா விவாகம் கற்புடைத்தா?"

உலக சரித்திரத்தை ஆராயுமளவில் மனித சமூகத்தாரின் மனப் போக்கும் அவர்களின் சமுதாய வாழ்வும் நாளுக்கு நாள் மாறிக்கொண்டு வருகின்றதென்பதை மறுக்க வியலாது. மேலும் பல நாட்டார் பலவித மதக் கொள்கைகளையும் பல வித ஆசார ஒழுக்கங்களையும் அனுசரிக்கின்றனர். ஒரு நாட்டாரின் வாழ்வு மற்றொரு நாட்டா ருடையதுபோலிருப்பது அருமை. வேம்பு தின்றவனுக்கு வேம்புருசி, கரும்பு தின்றவனுக்குக் கரும்பு ருசி" என்னும் சாதாரண பழமொழிக்கிணங்க அவரவர் செய்வது அவரவர்களுக்கு யுக்தமாகவே தோன்றும். நம் பழக்க ஒழுக்கங்களையும் சமுதாய வாழ்வையும் நம் தேசம்தக் கோட்பாட்டிற்கு இணங்கவும் யுக்தி அனுபவத்திற் கிணங்கவும் இலேசாக மாற்ற முயல வேண்டுமேயொழிய, பிற மதத்தினரையும், அயல் நாட்டாரையும் கண் மூடித்தனமாக, புலியைப்பார்த்து நரி சூடு போட்டுக்கொண்டது போல், பின்பற்றிப் போலி ஆசாரமுடையவர்களாக லாகாதென்பது மறுக்கக்கூடா உண்மை.

கிற்க நமது பத்திரிகாசிரியர் சென்ற சஞ்சிகையில் வரைந்தவாறு பழையபுராண இதிகாசங்களை ஆராய்ந்து நோக்குமளவில் விதவா விவாகம் எவ்விதத்திலேனும் கற்புடைய தாகாது என்பது திண்ணம்.

ஆயினும், ஒருவிதத் தீர்மானத்திற்கு வருவதற்கு முன் நம் விவாக முறையைப் பற்றிச் சிறிது கூறவேண்டிய தவசியம். இந்து விவாக முறையில் ஒன்றிலாவது ஒரு ஆடவனும் ஒரு பெண்ணும் தனியாகச் சந்தித்து ஒருவரை யொருவர் காதலித்துப் பின்பு தங்கள் பெற்றோருக் கறிவித்து விவாகம் முடித்துக்கொள்ளுதல் என்னும் விதி ஏற்படவே யில்லை. ஆனால் அனுபவத்திலிருக்கின்றதோ என்றாலோ அதிலுமில்லை.

க்ஷத்திரியர்களின் பூர்வ கதைகளின் மூலமாய் ஆராயுங்கால், ஆண், பெண்ணினுடைய ரூபலாவண்ணியத்தையும், குணநயத்தையும் கேள்விப்பட்டும், பெண் புருஷனுடையகீர்த்தியையும் புகழையும், வீரச்செயலையும் கேள்வியுற்றும், ஒருவர்மேல் ஒருவர் கரைகாணுக் காதலுற்று பிறர் மூலமாகத் தம்பெற்றோருக்கு முறையே அறிவித்து, சுயம்வர சார்பாக விவாக முடித்துக் கொள்வதுண்டென்பதை நளசரிதம் போன்ற கதைகள் தென்னெனக் காட்டுகின்றன.

முற்காலத்தில் பால்ய விவாகம் என்பது எட்டிலாவது அல்லது வழக்கத்திலாவது இருந்ததாக எங்கும் புலப்படவில்லை. தற்காலம் பால்யவிவாகம் நம்மவருள் வளர்பிறைச் சந்திரன் போல் ஏறுமுகங் காட்டிக்கொண்டு வருகின்றது. அந்தோ ! கஷ்டம் கஷ்டம்!! பால் மணம் மாறுப் பசலைகட்கும் கடிமணம் புரிகின்றனரே!

எடுத்துக்கொண்ட விஷயத்தை யொட்டிப் பேசுங்கால், ஒரு பெண் புஷ்பவதியான.பின் தாய் தகப்பனர் ஒரு புருஷனுக்கு மணம் செய்வித்த

பின்பு, சமீப காலத்தில் புருஷன் இறக்க நேரிட்டால், அவ்விதவை தன் புருஷனைக்காதல் மேலிட்டால் மணக்காவிடினும் அவனை மணந்தபோதே தெய்வமாகப் பாவிக்கவேண்டு மென்பதை "கல்லானாலும் கணவன்; புல் லானாலும் புருஷன், மண்ணானாலும் மணவாளன்" என்பது வற்புறுத்துவ தால், அவள் வேறு கணவனை இச்சித்து மறு விவாகம் செய்து கொள் வது கற்புக்குப் பங்கமேற்படு மென்பதற்கையமில்லை.

ஆனால், விவாகம் இன்னதென்பதும், இல்லற வாழ்க்கை இன்னதென் பதும், கணவன் என்றால்தான் என்ன என்பதுங்கூடக் கனவிலும் கேட் டறியாத 7 அல்லது 8 வயதுள்ள சிறு பெண் விவாகமான மறுவருஷத் திலாவது அல்லது புஷ்பவதி யாவதற்கு முன்பாவது (பாலிய விவாகக் கேட்டால்) விதவையாக நேரிட்டால், அதைக் கண்ணால் பார்த்துச் சகிக்க முடியுமா? அந்தப் பெண் காதலையாவது கற்பையாவது இன்னதென்று காதிலும் கேட்டிருக்குமா? இப்பால்ய விதவை மறுவிவாகம் செய்துகொள் வதில் யாது ஆக்ஷேபம். இதில் கற்பு நிலை குன்று மென்று அறிவுடையார் செப்பத்தரமோ! பச்சைக்கிளிபோல் பாவிப் பெண் பர்த்தாவை யிழந்து ஆயுள் முழுவதும் உலக வாழ்க்கையே இன்னதென்றறியாமல் உயிர்விட நேரிடுவதைப் பார்க்கிலும் மறு விவாகம்செய்து கொள்வதே சர்வ சிலாக் யம் என்பது நுண்ணறிவுடையோர் துணிபு.

பால்ய விதவை மறு கலியாணம் செய்து கொள்வதால் கற்பு நிலை மாறாதாகையால் இச்சீர்திருத்தம் நம் சமுதாய வாழ்வில் ஏன் செய்யக் கூடாது என்று கேட்கத் தடையென்ன?

ஆகையால் சாஸ்திரத்தையும், அனுபவத்தையும் ஒட்டிப்பேசும் பொழுது, புஷ்பவதியான பின்பு கலியாணமான பெண் விதவையாக நேரிடின் அப்பெண் மறுகலியாணம் செய்துகொள்வது உசிதமல்லவென் பதும், பால்ய விதவை மறு விவாகம் செய்து கொள்வதால் கற்புக்குப் பங் கம் ஏற்படாதென்பதும் அங்கை நெல்லியங்கனி யன்றோ.

உண்மையாகக் கூறுமிடத்து, ஒன்று பால்ய விவாகம் என்னும் வழக் கத்தை வேரோடு களையவேண்டும்; அல்லது பால்ய விதவா விவாகம் கற் புடைத்து என்பதைச் சான்றோர் நிலை நாட்டவேண்டும்.

S. V. L. வேங்கிட்டராம்,

சூலூர்.

குறிப்பு:—நமது நண்பர் கூறிய விஷயங்கள் யாவரும் ஒப்புக்கொள் ளத் தக்கனவேயாகும். மலராத மொக்கில் மணமில்லாதது போல், பருவ மடையாத கன்னிகைக்கு காதல் இன்னதென்பதே தெரியாதென்பது உண்மையே. அவள் ஒரு ஆடவன்மேல் இச்சை வைத்து அவனை மணக் கப் பிரியங் கொள்வது யாங்கனம்? ஆகையால் அவள் மறுமணம் புரிந்து கொண்டால், முதல் மணந்த கணவன்மேல் அன்பென்பதே யவள் மனதி வில்லாததால், அவள் முதல் முதலாக அந்த இரண்டாவது கணவன் மேலேயே காதல்கொண்டு கணவன் என்ற அன்பு பெறுவாள்— ஆனால் பருவம் வந்தபின் ஒருவனை மணம் புரிந்து, அவன் தன் கணவன் என்ற அன்புகொண்டு அவனோடு சுகமனுபவித்தவள், அவன் இறந்தபின், தானே இன்னொருவனை இச்சித்து மணம் புரிந்தாலும், முன் அனு

பவித்த முதல் கணவனைக் கருதமாட்டாள் என்று ஒருவர் நினைப்பது பெருந்தவறே. குரூபியான ஒரு மனைவியை யடைந்த ஒருவன், அழகு வாய்ந்த ஒரு வேசியிடம் சுகம் அனுபவிக்கையில் தன் அன்பிற்குரிய ஒரு குரூபியாகிய மனைவி யிருக்கிருள் என்பதை நினைக்காம லிருப்பானே. இது மானிட சுபாவத்திற்கு மாறுனதன்றே. இக்காரணத்தால் பருவ மடையுமுன் விதவையாய்விட்ட கன்னிகை மறுமணம் புரிந்துகொள்வ தால் கற்பிற்கு ஊனம் என்று கூறுவதற்கில்லை. கற்பு என்பது மனே நிலைமையைப் பொருந்தியது. மகா கற்பரசியாகிய கபீர் தாஸின் மனைவி தன் பர்த்தாவின் கட்டளைப்படி, அவர் அடியார்களுக்கு அமுது செய்விப்பதற்காக அரிசி முதலிய பண்டங்களை யளித்த வர்த்தகனுடைய காம இச்சையைத் தணிக்கச் சம்மதித்துச் சென்றுள். கணவரின் கட்டளையை நிறைவேற்றுவது நமது கடமையென்ற ஒரு நோக்கமே அவள் அதற்கு ஒப்பிச் சென்றதன் காரணமாதலால், அவள் பதிவிரதாத் தன்மை இன்னும் அதிகமாகப் பிரகாசித்ததேயன்றி அதற்குப் பங்கம் சற்றும் நேரவில்லை யன்றே.

இக்காரணங்களால் பருவ மடையுமுன் விதவையானவர்கள் மறுமணம் புரிவதில் குற்றமில்லை யென்பது நியாயமே. ஆயினும் அத்தகையோர் மட்டும் மறுமணம் புரிந்துகொள்ளலா மென்கிற வழக்கத்தை யனுபவத்திற்குக் கொண்டுவரின், நமது நாட்டார் அந்த வரம்போடிருக்க மாட்டார்கள். கொஞ்சங் கொஞ்சமாகப் பிறகு எல்லா விதவைகளுமே மறுமணம் செய்துகொள்வது சாதாரணமாகி விடும். பிறகு கற்பென்பதே நம் புண்ணிய பூமியை விட்டகலும் என்பதும், இக்கலிகாலத்தில் அதனால் பெருந் தீங்குகள் விளைந்து இப்புண்ணிய பூமி பாப பூமியாக மாறிவிடு மென்பதும் நாம் கூறுமலே யாவரும் உணரலாம். ஆகையால் இவ்வாலிப விதவைகளின் கோரக்காட்சி யடியோ டொழிவதற்காகப் பாலிய விவாகத்தை நிறுத்தி விடுவதே தகுதியான மார்க்கமாகும். நம்மவர்களிலுள்ள மதத் தலைவர்களும் மற்றப் பிரமுகர்களும் சிரத்தை யெடுத்துக்கொண்டு இப்பாலிய விவாகத்தைத் தடுக்க முயல்வார்களாயின் நம் நாட்டிற்குப் பேருதவி செய்தவர்களாவார்கள். பரம்பொருள் கிருபை புரிவாராக.

ஓம் தத் ஸத். பத்திரிகாசிரியர்.

---

## ஜீவகாருண்யம்.

சகோதர சகோதரிகாள்!

இதோ நாம் காண்பனவும் நமது கண்களுக்கு எட்டாதனவுமான சகல சராசரங்களும் ஜகதீசனுல் அவரது லீலையின் பொருட்டுப் படைக்கப்பட்டனவாக வேதங்களும், புராணங்களும் கூறுகின்றன. ஒவ்வொரு ஜீவனும் புல்லாயும், பூடாயும், மரம், பக்ஷி மிருகமாயும் எண்ணரிய பிறவிகள் எடுத்துக் கடைசியில் அபூர்வமாகிய இந்த மானிட ஜன்மத்தையும் அடைகிறது. உலகமாகிற பள்ளிக்கூடத்தில் மாணக்கன் ஆகிற ஜீவன் வாசித்து அதிக ஞானத்துடனும், தேஜசுடனும் தனது தாய் வீடாகிற ஈசனைத் திரும்ப அடைவதே சிருஷ்டியின் கருத்தாம். ஈசனை அடைவதென்றுல் அவருடைய தேஜோமயமான திவ்விய சொரூபத்தை உள்ளத்தில்

உணர்ந்து அதில் அன்புருவாய்க் கலந்துவிடுவதே ஆகும். நமது அன்னையாகிய ஔவைபிராட்டியார்.

"உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்
உடம்பினில் உத்தமனைக் காண்"

என்று கூறி இருக்கிறாள். அவ்விதம் இந்த மானிட தேகத்தில் ஈசனைக் காண்பதற்கு ஒருவழியே அல்லாது பலவழிகள் இல்லை. அன்பு மயமாகிய ஈசனை அன்பின் வழியாகத் தான் காணலாகும்.

"அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந் திருந் தாரே"

என்று திருமந்திரத்தில் திருமூலர் அருளியிருக்கிறபடி அன்பு வடிவமான ஜகந்நாதனை நாம் அறிந்து அனுபவிக்க வேண்டுமானால், ஆசாபாசங்களைக் களைந்து, காமாதி துஷ்ட குணங்களை நீக்கி, களங்கம் இல்லாத உள்ளத் தன்மையை அடைந்தால் இந்த தேகத்திலேயே அறிவாகிற கண்ணால் ஈசனைக் காணலாம். ஈசனைக் காண்பது எளிதல்ல. சிலந்திப்பூச்சி தனது வயிற்றிலிருந்து நூல்களை வெளியிட்டு அந்த நூல்களால் பெரிதான வலை வீடு கட்டிப் பார்ப்போர்க்குப் புலப்படாமல், தான் எவ்விதம் மறைந்து கொள்கிறதோ, அதுபோல் சர்வ அந்தர்யாமியான பகவான் அதிக விசித்திரங்களான சகல புவனங்களையும் படைத்துத் தம்முடைய சக்தியை எல்லாவற்றிலும் பரவச் செய்து தாம் மறைந்து கொண்டார். உலகத்தில் ஜீவர்களுக்குத் தாங்கள் செய்த காரியத்தால் அகங்காரம் ஏற்படுவது சகஜம் ஆனதாலும், மானிட சிரேஷ்டர்களை அனுசரித்து இதர ஜனங்கள் நடக்கவேண்டி இருப்பதாலும், சகல புவனங்களையும் சிருஷ்டித்த தான் மானிட வடிவத்தில் சஞ்சரிக்கும்பக்ஷத்தில் "சிருஷ்டிகர்த்தா யார்" என்ற கேள்விக்கு "நாமே" என்ற அகங்காரத்தை உண்டு பண்ணுகிற பதில் கொடுக்க வேண்டிவரும் என்றும், அதை மற்றவர்கள் கேட்டுத் தங்களுடைய செய்கைகளையும் "நாம் செய்தோம்" என்று அகங்கரிப்பார்கள் என்றும் கருதியே ஈசன் தம் உருவத்தை மறைத்துக்கொண்டாரோ என்று தோன்றுகிறது. பழத்தில் ரசமும், பாலினில் நெய்யும் எவ்விதம் விளங்கி இருக்கின்றனவோ அவைபோல் ஈசன் சர்வ வஸ்துக்களிலும் விளங்குகிறார்; அதனால் சகல ஜீவர்களும் ஈசனது அம்சமே. இப்பொழுது ஆடு, மாடு, கோழிகளாய் நாம் காண்கிற ஜீவன்களை நமது சகோதரர்களாகப் பாவிக்கவேண்டும். நாம் முன் ஜன்மங்களில் ஆடு, கோழிகளாய் இருந்து இந்த மானிட ஜன்மம் எடுத்திருப்பதுபோல அந்த ஜந்துக்களும் தடையன்னியில் ஜீவ விகாசத்தினால் மானுஷ ஜன்மம் எடுக்க இவ்வளவு பிரயாசைப் படுகின்றன. அவைகளை சகோதரர்களாகப் பாவித்து,

"எவ்வுயிரும் பராபரன் சன்னிதியதாகும்
இலங்கும் உடலுயிர் அனைத்தும் ஈசன் கோயில்"

என்று பாராட்டாமல் ஜந்துக்கள் நமது ஆகாராதி சுகத்திற்கு மாத்திரம் சிருஷ்டிக்கப்பட்டவைகள் என்று நினைத்து, அவைகளை நாம் கொல்வதை ஜகத் பிதாவான பகவான் சகிப்பாரா? ஆடு, மாடுகளையும், கோழிகளையும்

கொன்று அவையின் மாமிசத்தை யாதொரு இரக்க மன்னியில் தின்று காலம் கழித்த காட்டு மனிதர்கள் கூடவும் நாகரீகத்தால் ஜீவகாருண்யத்தை உணர்ந்து,

"செல்வத்திலும் செல்வம் ஜீவகாருண்யமே" என்று கருதி பிராணி ஹிம்சையை நிறுத்தி விடுகிறார்கள். அப்படி இருக்க முழு நாகரீகத்தை அடைந்த நமது இந்திய சகோதரர்கள் புலால் போஜனம் அருந்துவது இன்னமும் நடக்கிறது. சிலர் தமக்கென்று புசிப்பதைப் பார்க்கிலும் தமது தெய்வத்தின் பேரைச் சொல்லித் தின்பது பாபம் இல்லை என்று நியாயத்தைச் சொல்லிக்கொண்டு தாங்கள் தெய்வமாகக் கொண்டாடுகிற மாடனுக்கும் காளிக்கும், ஆடு கோழிகளைப் பலி கொடுத்து அவையின் மாமிசத்தை யருந்துகின்றனர். மிருகபலி தெய்வத்திற்குச் சம்மதம் உள்ளதல்ல என்றும் அதனால் பாபமே உண்டாகுமென்றும் தெரிந்தவர் அறிவிலார்க்குச் சொல்லி உபதேசிக்காமல் இருந்தால் அதனால் உண்டாகிற ஜீவநாசத்தின் கொடிய பாபங்கள் அவர்களையே அணுகும். ஒரு தகப்பனுக்குத் தன் குழந்தைகளின் மேல் உள்ள அன்புக்கு எப்படி வித்தியாசம் இல்லையோ, அதுபோல ஈசனுக்குத் தன் குழந்தைகளாகிய ஆடு கோழிகளில் அவரது கருணையைக் குறைப்பாரா? வாயில்லாத அந்தப் பிராணிகளைக் கொல்வது அவருக்கு சம்மதமாகுமா? அப்படிச் சம்மதப்படுகிற தெய்வம் தெய்வமாகுமா? அதற்கு தெய்வத்வம் உண்டா? அது ராக்ஷதத்வம் அல்லவா?

நம்மைப்போலவே ஆடு கோழிகளும் தம் குஞ்சுகளை எவ்வளவு அன்புடன் ஆதரிக்கின்றன வென்பதை நாம் பார்த்ததில்லையா? குஞ்சுகளை, பறவையோ மனிதனோ உபத்திரவம் செய்யத் துணிந்தால் தாய் இனங்கள் கதறி ஓடி எதிர்ப்பதை நாம் பார்க்கிறோம் அல்லவா? ஜந்துக்களை வெட்டும் காலத்தில் அவையின் மனோவிகாரத்தை நாம் சூக்ஷ்மகண்களால் பார்ப்போமானால் ஒரு காலத்திலும் அவைகளைத் துன்பப்படுத்தமாட்டோம். பலி இடுகிற சமயம் ஆடு கோழிகள் கூப்பிடுகிற மிருக பாஷை நமக்குத் தெரிந்து இருந்தால் அவற்றை வெட்டுவதற்கு மனம்தான் வருமா? வாளுடன் கையைத்தான் ஓங்குவோமா?

K. S. நாராயண அய்யர்.

குறிப்பு:—

"கொல்லா விரதம் குவலயத் தோர்கள்
எல்லாம் பெருமினென் றியம்பிய தயாநிதி"

என்று தாயுமானவரைக் குறித்து அவர் சீடராகிய அருளைய சுவாமிகள் தமது அருள்வாக்கிய அகவலில் கூறியதுபோல் ஒரு ஜீவனையும் வதைக்காமை ஜீவகாருண்யமேயாகும். நமது நாட்டில் இயற்கை யாகவே மாமிசபக்ஷணம் செய்யாத வருணத்தினரும், குடும்பத்தினரும் அனேகர் உண்டு. ஆனால் ஜீவகாருண்யம் என்பது இவ்வொன்றோடு முடிந்துவிடவில்லை. அனேகர் மாமிசபக்ஷணம் மட்டும் நீக்கிவிட்டு 'நாங்கள் சைவம்' என்று கூறிக்கொள்கிறார்கள். ஆனால் ஆறறிவுடைய தங்கள் இனமாகிய ஜீவர்களுக்கு இவர்கள் செய்யும் சீவகாருண்ய மற்ற செய்கைகளோ கடவுளுக்கே அற்புதம். மோசம், வஞ்சனை, சூது, துரோகம், செய்ந்நன்றி

மறத்தல், முதலியவைகளால் அன்னியருக்குச் சொல்லொணாத் துன்பங்களை யுண்டாக்கி அவர்கள் மனம் புண்படும்படிச் செய்கிறார்கள். இத்தகையோர் நாங்கள் "சைவம்" ஆதலால் ஜீவகாருண்ய முடையோர் என்று கூறிக்கொள்வதில் ஒரு பயனுமில்லை.

நாம் ஒரு தின்பண்டம் புசித்துக்கொண் டிருக்கையில் கேட்க வாயில்லாத ஜந்துவாகிய ஒரு பூனையோ நாயோ பயத்தோடும், ஏக்கத்தோடும், ஆவலோடும் நம் முகத்தைப் பார்த்தபடி கத்துகிறது. அதைக் கல்லாலடித்துத் துறத்திவிட்டு நாம் தின்றால் நாம் ஜீவகாருண்ய முடையவராவோமோ? இன்னொருவருடைய துன்பத்தைக் கண்டு மனம் பதைக்காது, அவர்கள் துன்பத்தைத் தீர்க்கமுயலாது பேசாமல் பார்த்துக்கொண்டு செல்வது ஜீவகாருண்யமாகுமோ? நம்மிடம் ஆகாரமோ காசோ இருக்கையில் ஒரு சுத்த ஏழை மிக்கபசி என்று கேட்கும்போது அவனைவைதுத் துறத்திவிட்டு ஊறிய நூறு பிராமணருக்கு சமாராதனை செய்தல் ஜீவகாருண்யமாகுமோ?

ஆகையால் சகோதர சகோதரிகளே! மாமிசம் புசிக்காதிருப்பது மட்டுமே ஜீவகாருண்ய மாகிவிடாது. அதோடு,

(1) பிறர்துயரம் நம்துயரம்போல் கருதவேண்டும்.

(2) ஒரு ஜந்துவின் மனம் நோகும் வண்ணம் நம்மால் ஒரு பிராணிக்கு இம்சையுண்டாகும் வண்ணம் நடந்துகொள்ளலாகாது.

(3) பிற உயிர் துன்பப்படுவதைக் கண்டால் நம்மாலான வரையில், அத்துன்பத்தை நீக்கத்தக்க உதவியைச் செய்யவேண்டும்.

(4) உயர்ந்த ஜீவனாயினும் சரி, தாழ்ந்த ஜீவனாயினும் சரி, எல்லா உயிர்களையும் தன் உயிரைப்போலவே கருதி நடக்கவேண்டும்.

இவ்வாறு மனச்சாட்சிக்குச் சரியாக நடந்து கொள்வதே உண்மையான ஜீவகாருண்யமாகும்.

பத்திரிகாசிரியர்.

---

## விஷயதானம்

(I)

எம்மதமும் சம்மதமே—ஓர் மறுப்பு என்ற விஷயத்தை யனுப்பிய ம-ா-ா-ஸ்ரீ, T. T. அதிசயம் பிள்ளை (திருச்சிறுப்பள்ளி) அவர்கட்கு

கீழ்க்கண்ட காரணங்களால் தங்கள் வியாசத்தை நமது சஞ்சிகையில் பிரசுரிக்க அனுகூலமில்லை:—

(1) உலகில் உமக்குரிய ஒருமதமே கடவுளா லுண்டாக்கப்பட்டதென்றும், மற்ற மதங்களனைத்தும் கடவுளுக்குப் பிரியமான மதமல்லவென்றுங் கூறும் குருட்டுக்கொள்கை யறிவாளிகள் ஒருபோதும் ஒப்பாததும், மதிகெட்டார் கூற்றென் றென்றொதுக்கி எள்ளி நகைக்கத் தக்கதுமாகும். மேலும் அவ்வாறு கூறுவதால் கடவுள் சர்வ வல்லமையுடையவரும் எதிரற்றவரும் அல்லவென்று ஒப்புக்கொள்ளுகிறீர். ஏனெனில், தாமே ஒருமதத்தை யுண்டாக்கிய கடவுள் தம்பிரியத்திற்கு மாறாக வேறு

பொய்மதங்கள் உண்டாவதையும், அவற்றில் மனிதர் உற்பத்தியாகி விர்த்தி யடைவதையும் தடுக்க வல்லமையில்லாத கடவுள் எப்படி சர்வ வல்லமை யுடையவராவார்.

(2) ஹிந்து மதமும், புரொடஸ்டாண்ட் கிருஸ்துமதமும் பொய் யென்று உமது குயுக்திப்படி நிரூபித்து விட்டதாய் தீர்மானித்துக்கொண்டு, மற்றமதங்களையும் ஒவ்வொன்றாய்ப் பொய்யென்று நிரூபிக்க அவகாசமில்லாததால் விட்டு விட்டதாகக் கூறுகிறீர். அந்தோ! இன்னம் நான் கைந்து பக்கங்கள் வரைந்து மஹம்மது மதம், புத்தம், சமணம் முதலிய வற்றையும் பொய்யென்று நிரூபித்து, ஒரேமதத்தை உலகில் நிலைநாட்டி யிருந்தால் உலகிற்குப் பேருபகாரமா யிருக்குமே யென விசனிக்கிறோம்.

இந்த விஷயம் நமது சஞ்சிகையில் வெளிவந்தால் ஒருவரால் அல்ல பலரால் உமது சுருதியுத்தி அனுப விருத்தமானவையும் சாக்கிர சொப்பனம் போன்றனவுமாகிய கண்டனங்கள் சூறாவளியிலகப்பட்ட இலவம் பஞ்சுபடும்பாடாய்ப் பறக்கடிக்கப் பட்டுபோம். அதோடு நீர்கூறும் ஒரே மதமும், உமது ஆபாசப் பிரசங்கத்தால் பலருடைய கண்டனத்துக் குள்ளாகும். கடைசியில் இது மதச்சண்டையாக ஏற்படும்.

ஆகையால் இதற்கு நமது "ஆனந்தன்" இடந்தரான் என்று விசனிக்கிறோம்.

(II)

ம-া-া-ஸ்ரீ, I. H. காதர்பாக்ஷாஸாஹிப் }
S. M. S. பீர்மகம்மது } ஸ்ரீமத் சிவானந்த

சாகரயோகீஸ்வர ரவர்கள் மஹம்மதியர்க் குள்ளும் கரம்போல் ஒன்றை வைத்து வணங்குகிறார்கள் என்று ("ஆனந்த போதினி" 278-பக்கத்தொடர்ச்சியாக வந்த இல்லறம்—விக்கிரகாராதனை என்ற விஷயத்தில்) கூறியிருப்பது மகம்மதியர் விக்கிரகாராதனைக்காரர் என்று நிரூபிக்க எண்ணிக் கூறவந்ததல்ல. 'கடவுளை அரூபியாக மனதில் தியானிப்பது கடினம் ஆதலால் ஒருவுருவமாகப் பாவிப்பது அவசியம் என்று தம்மதத்தைக் கூற வந்தவர், பிறமதங்களிலும் அறிகுறி யாகவாவது, சிலுவை, கரம் முதலியவைகளை வணங்குகிறார்கள் என்று பிரத்தியக்ஷத்தில் காண்பதைக் கூறினதேயன்றி வேறல்ல.

இஸ்லாம் மார்க்கமே அக்காலத்திலிருந்த பிரதிமையாராதனையை யழித்தெழுந்த தென்றும், இஸ்லாம் மார்க்கத்திற்கு விக்கிரகாராதனை விரோதமான தென்பதும், குர் ஆன் ஷரீபில் விக்கிரகாராதனை விலக்கப் பட்டதே யென்பதும் உலகப் பிரசித்தமானதே. ஆகையால் மேலே கூறப்பட்ட வார்த்தைகளாலேயே இஸ்லாம் மார்க்கம் விக்கிரகாராதனை யுடையதென்று கூறவந்ததாகக் கருதலாகாது. ஏனெனில் முற்றும் மாறானதும் ஆதாரமற்றதும், நிரூபிக்கச் சற்றும் கூடாததுமான விஷயத்தை யாரே கூறுவர். ஆகையால் மஹம்மதிய சகோதரர்கள்! இதைக் குற்றமாகக் கருதாதிருக்கக் கோருகிறோம்.

(III)

ம-া-া-ஸ்ரீ, ஆ. பாலசுப்ரமணியம் அம்பலக்காரர் உபாத்தியாயர், காட்டுப்புத்தூர்.

தங்கள் அவமரியாதையான கடிதத்தோடனுப்பப்பட்ட வியாசத்தில் சிலரை இழிவுபடுத்திக் கூறியிருப்பதோடு, அவ்வியாசத்தில் தாங்கள் கர்வங்கொண்டு சில விஷயத்தைக் கூறத் துணிந்ததாகத் தாங்களே கூறுகிறீர்கள். இவற்றோடு குறித்த விஷயம் முன்னமே முடிவிற்கு வந்து விட்டதால் அதைப்பற்றி மறுபடி பிரஸ்தாபிப்பது அனாவசியமாகும்.

பத்திரிகாசிரியர்.

---

## 5-வது அத்தியாயம்.

## அந்தரக்களவு அல்லது தபால் கொள்ளைக்காரர்கள்.

(279-ம் பக்கத்தொடர்ச்சி)

தற்செயலாய் இவ்வித விபத்து நேர்ந்ததைக் கண்ட ஆனந்தலிங் அவர்கள் பார்வைகளினாலேயே, சாமிநாதன் தன்னை யின்னானென்று அறிந்து கொள்ளவில்லை யென்றும், இரங்கநாதன் எப்படியோ தெரிந்து கொண்டானென்றும் உணர்ந்து கொண்டான்.

இனித் தாமதிக்காமல் இந்த எல்லையை விட்டு மறைந்துவிட வேண்டியதே தகுதி யென்றுணர்ந்தவனாய் நாம் கூறியபடித் துரிதமாய் தான் உள் நுழைந்தபடியே வீட்டிலிருந்து வெளித் தாண்டிவிட்டான்.

தன் சாமார்த்தியத்தால் தான் வீட்டிற்குள் எந்த வழி வந்ததும் எந்த வழி வெளி தாண்டியதும் ஒருவர்க்கும் கண்டறிய வொட்டாது செய்து விட்டான். வீட்டைத் தாண்டி வந்தபின் தன் உடைகளைத் திருப்பி யணிந்துகொண்டு ஒரு நாணயமான வர்த்தகன் போல் உரு மாறித் தான் தங்கி யிருக்கும் ஹோட்டலில் தன் அறைக்குச் சென்று பரம யோக்கியன்போல் சயனித்துக் கொண்டான்.

இரங்கநாதன், முன் ஒரு விடத்தில் தான் ஒரு குற்றத்தைக் கண்டு பிடித்தபோது, தன்னைப் பார்த்திருப்பதாய் ஆனந்தலிங்குக்கு நினைப்பிருக்கிறது. எப்படியாயினும் சரி, தான் நடக்கவேண்டிய வழி இன்னதென்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டான்.

"முதலாவது நவீனபுரி நகருக்கேகிப் பட்டர் வீதியிலுள்ள மார்க்கபந்துவின் ஹோட்டலுக்குச் சென்று அப்பெண்ணை யங்கிருந்து அழைத்துப் போய் எங்காவது மறைத்து வைக்கவேண்டும். அவளை யிக்கள்ளர் கையில் சிக்கவிடாமற் செய்யவேண்டும். நாளை காலையில் நவீனபுரிக்குப் புறப்படவேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான்.

ஆனால் நம் மெண்ணப்படி யாவும் நடக்குமா! நாமொன்று நினைக்கக் கடவுள் தானொன்று அமைக்கிறார்." இடையில் நேர்ந்த சம்பவத்தால் அவனுடைய விவகாரங்கள் யாவும் அடியோடு மாறிவிட்டன.

மறுநாள் காலை இரயில் வேளைக்கு ஆயத்தமாய் ஆனந்தலிங் உடுத்துக்கொண் டிருக்கையில் வீதியில் பத்திரிகை விற்பவன் கூவ உடனே ஒரு பத்திரிகை வாங்கி வாசிக்கத் தொடங்கினான். அதில் எடுத்ததே பெரிய வெழுத்தில் ஒரு தலைப் பெயரைக் கண்டு அதைக் கீழ்க்கண்டபடி ஆத்திரத்தோடு வாசித்தான்:—

"பெரிய இரயில் தபாற்கொள்ளை" கள்ளன் அகப்படவில்லை. தபால் ஆபீஸ்களிலுள்ள பல இலிகிதர்கள் சந்தேகத்திற்குள்ளாகியிருக்கிறார்கள்.

இக்களவைப் பற்றி பலபேர் பலமாதிரி தீர்மானிக்கிறார்கள். அந்தத் தபால் வண்டி நவீனபுரியிலிருந்து நேராய் அமலாபுரிக்குச் செல்லும் 35-வது நம்பர் வண்டி. அது மேலையூர் தவிர வேறெங்கும் நிற்பதில்லை. அன்றும் வழக்கம்போல் தபால்கள் வாலாயமான தபால் வண்டியில் போடப்பட்டு தபாலாபீஸில் இருக்கும் கதவிலுள்ள சிறு திட்டிவாயில் வழியே உள்ளே போடப்பட்டன.

தபால் ஏஜன்டாகிய சாமிநாதன் பிள்ளை அன்றும் வழக்கம்போல் தபால்கள் அதே வழியாய் உள்ளே போடப்பட்டனவென்று சாட்சி கூறுகிறான். தபாலாபீஸில் தபால்களைத் தினம் எடுக்கும் இலிகிதன் காணாமற் போன தபால் பை யவற்றில் இல்லை என்று கூறுகிறான். அந்தக் காணாமற் போன பையில் ரிஜிஸ்டர் முதலிய விலை மதிப்புள்ளவை யதிகமா யிருந்தன. ஆகையால் இக்களவு மிக்க மர்மமானதா யிருக்கிறது. மெயில்வண்டி நின்ற ஸ்டேஷன்களுக் கெல்லாம் தந்தி கொடுக்கப்பட்டது. ஆயினும் மெயில் ஏஜென்டாகிய சாமிநாதம் பிள்ளை அந்தப் பை மேலையூரில்தான் இறக்கப் பட்டதென்று உறுதியாய் வாக்குமூலம் கொடுத்தான். அவன் ஆளாகிய வண்டிக்காரனும் மேலையூர் தபால் ஆபீஸில்தான் அப்பையை நான் போட்டேன் என்று வாக்குமூலம் கொடுத்தான்.

மேலையூர் தபாலாபீஸி லிருக்கும் இலிகிதர்களும், தபால் கட்டுகளை ஸ்டேஷனிலிருந்து தபாலாபீஸுக்குக்கொண்டுபோகும் வண்டிக்காரனும் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். போஸ்ட் மாஸ்டர் ஜனரல் ப்ரக்யாதி பெற்ற ஆனந்தஸிங் என்ற துப்பறியும் சிங்கத்தை மெயில் களவுகளைப் பிடிப்பதற்காக ஒரு வாரத்திற்கு முன்பு அனுப்பி யிருப்பதாகத் தெரிகிறது. எப்போதும் துப்பறிவோர் நடவடிக்கை மிக்க மர்மத்திலேயே யிருக்கும். ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயம். ஆனந்தஸிங் அக்கள்ளரைக் கைப்பிடியாய்ப் பிடித்துக்கொண்டு வெளிப்படுவான் என்று எந்த நிமிடத்திலும் எதிர் பார்க்கலாகும்.

அந்தப் பை பலவழிகளில் களவாடப்பட்டிருக்கலாகும். இரயிலிலிருந்து பிரம்மாண்டமான பெரிய வண்டியில் பைகளைப்போட்டுக் கொண்டு இருட்டில் தபாலாபீஸுக்குக் கொண்டுபோகையில் கள்ளன் வண்டியின் பின்பக்கம் பதுங்கிவந்து மெதுவாய் ஒரு பையை யிழுத்துக் கொள்ளலாம். அப்போதும் தபால் இலிகிதர்கள் மேல் சந்தேகம் விழும்."

மேல்கண்ட யாவற்றையும் ஆனந்தஸிங் வாசித்தபின் நெடுநேரம் ஆழ்ந்த சிந்தனையிலிருந்தான். அதன்பின், "இல்லை யில்லை. ரயிலிலிருந்து தபாலாபிசுக்குச் செல்லும் மார்க்கத்திலும் களவு போகவில்லை. இலகிதர்களும் களவிடவில்லை. இதில் ஏதோ மர்மம் இருக்கிறது. மிகவும் ஆழமான பெரிய மர்மமிருக்கிறது. ஆனால் பத்திரிகையில் என் பெயரையும் நான் இக்களவைக் கண்டுபிடிக்க அமர்த்தப்பட்டிருக்கிறேன் என்பதையும் எந்த முட்டாள் எழுதியவனோ அவனைக்கண்டால் கன்னத்தில் நல்ல அறை கொடுப்பேன்" என்று தனக்குத் தானே கூறிக்கொண்டான். (தொடரும்)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

---

## பொது சமாசாரங்கள்.

அட்லாண்டிக் மகா சமுத்திரம்.—இம் மகா சமுத்திரம் எவ்வளவு விரிந்து பரவியுள்ளதெனில், உலகின் கண்ணுள்ள பூபாகங்களனைத்தையும் அதன் மூன்றில் ஓர் பாகத்தில் அடக்கிப்போடலாமாம்.

நாற்பது நாளில் நாலடுக்கு மெத்தை வீடு.—அமெரிக்காவில் இரும்பும் சிமிட்டியுஞ் சேர்த்து 546 அடி நீளமும் 186 அடி அகலமும் நாலடுக்கு உயரமுமுள்ள மெத்தைவீடொன்றை அவ்விடத்துக் கொல்லத்துக்காரர்கள் 40 நாட்களில் கட்டி முடித்தனராம்.

புது கவர்னர் ஜெனரல்.—நம்மிந்தியாவுக்கு கவர்னர் ஜனரலாக வரவிருக்கும் லார்டு ரீடிங் என்ற பிரபு அவர்கள் இங்கிலாந்திலிருந்து தமது பத்தினியாரோடு புறப்பட்டு இஜிப்டிலுள்ள செய்ரோ பட்டணத்துக்கு நாளது மாதம் 23-ம் தேதி வந்துசேர்வாரென்றும், அவ்விடத்தில் லார்டு ஆலன்பி என்ற பிரபுவால் உபசரிக்கப்படுவாரென்றுந் தெரிய வருகிறது.

தபால் இலாகா.—இந்த இலாகாவைச் சேர்ந்த ஆபீசுகள் சென்ற 1920-ம் வருஷத்திய கணக்கின்படி 19,439 என்றும், அவைகளில் அலுவல் பார்க்கிறவர்கள் 100,894 பேர்களென்றும், செலவுபோக கிடைத்த வரும்படி ரூ. 73,64,682 என்றும் சொல்லப்படுகிறது. இந்த இலாகாவினால் சர்க்காருக்கு நல்ல இலாபமுண்டாவதுமல்லாமல் ஜனங்களுக்கும் அதிக சௌகரியமும் பிரயோசனமுமுண்டாகிறது. அப்படியிருந்தும்,இப்போது ஏற்பட்டிருப்பதும் இனி ஏற்படும் என்று எதிர் பார்க்கப் படுவனவுமாகிய மாறுதல்களால் ஜனங்களுக்கு மிக்க கஷ்டம்ஏற்படுமென்று அஞ்சவேண்டியிருக்கிறது. எல்லா வி.பி.களையும் ரிஜிஸ்டர் செய்யவேண்டுமென்ற புதுச் சட்டத்தால் வர்த்தகர்களுக்கும் ஜனங்களுக்கும் கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. அரை ரூபாய் பெறும்படியான ஒரு சாமானை வி. பி.யில் வாங்குபவன், கூட இரண்டணை இப்போது அதிகமாய்க்கொடுக்க வேண்டியிருக்கிறது. வி.பி. ஏற்பாட்டால் வர்த்தகம் மிக்க விர்த்தியடைந்ததோடு ஜனங்களுக்கும் மிக்க அனுகூலமுண்டாயிருந்தது. மேற்கண்ட ரிஜிஸ்டர் சட்டம் இதற்கு இடையூறுய்விட்டது.

இப்போது இனி கார்டின் விலை காலணாவாயிருப்பதை அரையணாவாக உயர்த்தவும், மணியார்டர் கமிஷனையும் தபாற் கட்டண விகிதங்களையும் அதிகப்படுத்தவும், வரவு செலவு (Finance Minister) மந்திரிமார் ஆலோசித்திருப்பதாகத் தெரியவருகிறது. இந்த ஏற்பாடு அங்கீகரிக்கப்பட்டு அமுலுக்கு வருமாயின், முன்னமே உணவுப்பொருள்கள் முதல் எல்லாப் பொருள்களின் விலையேற்றத்தால் பெருங்கஷ்டத்தை யனுபவித்துக்கொண்டிருக்கும் ஜனங்களுக்கு மிக்க அனனுகூல மேற்படும். தபால் கட்டணத்தை யுயர்த்துவதாலும், வி. பி.க்களை ரிஜிஸ்டர் செய்யவேண்டுமென்ற சட்டத்தாலும் பத்திரிகைகளின் அபிவிர்த்திக்கு மிக்க இடையூறு ஏற்படுமென்பது திண்ணம். இது தேச க்ஷேமாபி விர்த்திக்கே இடையூறை யுண்டாக்குவதாகும். இந்த வழியில் வருமானத்தை உயர்த்துவது, கோபுரங்கட்டக் கோயிலை யிடிப்பது போலாகும். இந்த விஷயத்தில் சம்பந்தமுடைய அதிகாரிகள் இதைப்பற்றி தீர்க்காலோசனை செய்வார்களென்று நம்புகிறோம். நகர சங்கத்தாரும் ஒரு பக்கம் வரிகளை உயர்த்தி விட்டிருப்பது தெரிந்த விஷயமே.

# " ஆனந்த போதினி " பஞ்சாங்கம்

## துன்மதிஸு சித்திரைமீ—சாலிவாகனம் 1844-கலியுகாதி 5023
## பசலி 1330-31—கோல்லம் 1096-97—ஹிஜரி 1339-40
## இங்கிலீஷ் 1921ஸு ஏப்ரல்மீ—மேமீ

| சித்திரை | ஏப்ரல்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | புத | பஞ்7-18 | மிரு-35-26 | சித்-60 | சஷ்டி விரதம் |
| 2 | 14 | வியா | சஷ்2-18<br>சப்56-58 | திரு-32-8 | ம-32-8அ | கமல சப்தமி விரதம் |
| 3 | 15 | வெ | அ51-23 | புன-28-31 | சி-28-31ம | குடிபுக |
| 4 | 16 | சனி | நவ45-43 | பூச-24-43 | சி-24-43ம | ஸ்ரீராமநவமி விரதம் |
| 5 | 17 | ஞா | தச40-3 | ஆயி-20-56 | சி-20-56ம | பிரயாணத்திற்கு விலக் |
| 6 | 18 | திங் | ஏ34-33 | மக-17-16 | ம-17-16சி | கரிநாள் [கு |
| 7 | 19 | செவ | து29-31 | பூர-13-53 | சி-13-53அ | வாமன துவாதசி |
| 8 | 20 | புத | திர24-43 | உத்-10-58 | அ-10-58ம | திரயோதசி திதி |
| 9 | 21 | வியா | சது20-51 | அஸ்-9-1 | சித்-60 | சதுர்த்தசி திதி; விரதம் |
| 10 | 22 | வெ | ○ 18-35 | சித்-7-53 | சித்-60 | திதி துவயம் |
| 11 | 23 | சனி | பிர16-55 | சுவா-7-54 | சித்-60 | விதை விதைக்க |
| 12 | 24 | ஞா | து16-55 | விசா-9-18 | மர-60 | வகீச தீர்த்தம் |
| 13 | 25 | திங் | திரி18-27 | அனு-12-6 | சித்-60 | குடிபுக, உபநயனம் |
| 14 | 26 | செ | சது21-13 | கேட்-16-21 | ம16-21அ | யாத்திரைக்கு விலக்கப் |
| 15 | 27 | புத | பஞ25-23 | மூல-21-53 | ம21-53அ | கரிநாள் [பட்டது |
| 16 | 28 | வியா | சஷ்30-16 | பூரா-28-28 | சித்-60 | கிணறு வெட்ட |
| 17 | 29 | வெ | சப்36-26 | உத்-35-41 | சி-35-41ம | மாடு கொள்ள |
| 18 | 30 | சனி | அ42-18 | திரு-42-56 | சித்-60 | ஸ்ரீநடராஜர் அபிஷேகம் |
| 19 | 1921ஸு மேமீ 1 | ஞா | நவ47-43 | அவி-49-43 | ம-49-43சி | மரணயோகம் |
| 20 | 2 | திங் | தச52-10 | சத-55-41 | சித்-60 | அப்பர் திருநட்சத்திரம் |
| 21 | 3 | செ | ஏ55-16 | பூர-60-0 | மர-60 | அக்கினிநாள் ஆரம்பம் |
| 22 | 4 | புத | து56-48 | பூர-0-13 | அ-0-13சி | தானியம் வாங்க |
| 23 | 5 | வியா | திர56-33 | உத்-3-8 | சித்-60 | மகாவாருணி விரதம் |
| 24 | 6 | வெ | சது54-46 | ரே-4-46 | சி-4-46அ | |
| 25 | 7 | சனி | ● 51-43 | அசு-4-16 | சித்-60 | |
| 26 | 8 | ஞா | பிர47-0 | பர-2-16<br>*கிரு-59-33 | பிர-2-16<br>சி-59-33 | |
| 27 | 9 | திங் | துதி41-43 | ரோ-56-5 | அ-56-5சி | |
| 28 | 10 | செ | திரி35-41 | மிரு-51-51 | சி51-51ம | |
| 29 | 11 | புத | சது29-18 | திரு-47-23 | சித்-60 | |
| 30 | 12 | வியா | பஞ்22-50 | புன-42-53 | அ42-53சி | |
| 31 | 13 | வெ | சஷ்16-30 | பூச-38-38 | மர-60 | |

| | | | |
|---|---|---|---|
| பு | சு கே<br>சூ செ | | |
| | 14-மே-புத<br>30-ரிஷ-பு<br>13ரிஷ-செ | | |
| | | | குரு<br>சனி |
| | | ராகு | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE
"ANANDA BODHINI" POWER PRESS,
15, VENKATESA MAISTRY STREET, MADRAS.